உ சிவமயம்



# சைவ மகத்துவம்

## (GLORIES OF SHAIVAISM)


ஆங்கிலத்தில் எழுதியவர்:

**சைவப் பெரியார்**

**சு. சிவபாதசுந்தரம் அவர்கள், பி.ஏ.**

முன்னாள் முதல்வர், விக்டோரியா கல்லூரி,

சுழிபுரம், யாழ்ப்பாணம், ஸ்ரீ லங்கா.

தமிழாக்கம் செய்தவர்:

**பண்டிதர் மு. கந்தையா, பி.ஏ.**

ஏழாலை, யாழ்ப்பாணம், ஸ்ரீ லங்கா.



**வெளியீடு :**

குரு பரம்பரை தினம்

சைவ சித்தாந்தி சிவபாதசுந்தரனார் குருபூசை அறங்காப்பு

மே/பா கலாமண்டபம், எண். 3, லோரோங் ஸ்கொட்,

50470 குவாலாலும்பூர், மலேசியா.

சிவஸ்ரீ க. வைத்தீஸ்வரக் குருக்கள் அவர்கள்,
தங்களுக்கு இந்நூலை அனுப்புவதில் மிக
மகிழ்ச்சி அடைகிறோம்.

அறக்கட்டளை ஆணைப்படி

ஐ. இலவீரசிங்கம்


Guru Paramparai Thinam
Saiva Sidthanthin Sivapada Sundranar
Guru Poojah Trust
c/o Kalamandapam
No 3 Lorong Scott
50470 Kuala Lumpur


உ
சிவமயம்

# சைவ மகத்துவம்

## (GLORIES OF SHAIVAISM)


ஆங்கிலத்தில் எழுதியவர்:
**சைவப் பெரியார்**
**சு. சிவபாதசுந்தரம் அவர்கள், பி.ஏ.**
*முன்னாள் முதல்வர், விக்டோரியா கல்லூரி,*
*சுழிபுரம், யாழ்ப்பாணம், ஸ்ரீ லங்கா.*

தமிழாக்கம் செய்தவர்:
**பண்டிதர் மு. கந்தையா, பி.ஏ.**
*ஏழாலை, யாழ்ப்பாணம், ஸ்ரீ லங்கா.*



**முதற் பதிப்பு**
**1997**

பிரசுரம்:
குரு பரம்பரை தினம்
சைவ சித்தாந்தி சிவபாதசுந்தரனார் குருபூசை அறங்காப்பு,
மே/பா கலாமண்டபம், எண். 3, லோரோங் ஸ்கொட்,
*50470 குவாலாலும்பூர், மலேசியா.*

**FIRST EDITION**

Published on

**16. 8. 1997**

**Guru Paramparai Thinam**

**By**

Saiva Sidthanthin Sivapada Sundaranar Guru Pooja Trust
C/o Kalamandapam, No. 3, Lorong Scott,
50470 Kuala Lumpur, Malaysia.





**கணினி அச்சுக்கோப்பு :**
'கிள்ளி'





GLORIES OF SHAIVAISM
ஆங்கில மூலநூல் ஆசிரியர்:

சைவத்திருவாளர் **சு. சிவபாதசுந்தரம், பி. ஏ.**
*தோற்றம்: 17.1.1877 மறைவு: 14. 8.1953*
*முன்னாள் முதல்வர், விக்டோரியா கல்லூரி,*
*சுழிபுரம், யாழ்ப்பாணம், ஸ்ரீ லங்கா.*

# பொருளடக்கம்

## முன்னுரை

சைவமகத்துவம் என்னும் இந்நூல் அன்பர்களின் வேண்டு தலுக்கமைய எழுதப்பட்டது. தருக்க சாஸ்திரம் பற்றிய சிறிய நூலொன்று எழுதி முடிந்த கையோடு இந்நூல் எழுதும்பணி ஆரம்பிக்கப்பட்டது. இதனை எழுதியதன் மூலம், இயல்பாகவே கீழ்நிலைப் பட்டிருந்த தமது தேகபலம் மேலும் பாதிப்புற்று விட்டதாக இந்நூல் முடிவில் ஆசிரியர் எழுதியுள்ளார்.

கந்தவனம்,
வல்வெட்டித்துறை
14 மே, 1953

அன்புள்ள பெறாமகன்,

இந்த மார்கழியில் நான் சுகவீனமுற்றிருந்தபோது, 'இனித் தர்க்கம்பற்றி எழுதுவதை விட்டு, சைவத்தின் சிறப்புகள் பற்றி ஒரு நூல் எழுதுங்கள்' என நீர் கேட்டிருந்தீர். இப்போது நூலை எழுதி முடித்துள்ளேன்.இவ்வேலை என் தேக சுகத்திற் பெரும்பகுதியைப் பாதித்திருக்கிறது. தலையிடி, சமியாக்குணம் முதலான பல நாளாகப் பாதிப்புற் றுள்ளேன். இனி இதன் குறைகளை ஆராய்ந்து, திருத்தி, இதன் மொழிநடையை மேம்படுத்தி இதற்கு இறுதி வடிவம் கொடுப்பது உமது பொறுப்பாகும். இவை அனைத்தையும் தானாகச் செய்ய முடியாத அளவுக்கு மிகவும் இளைத்துப் போனேன்......

அன்புள்ள,
சிவபாதசுந்தரம்

## முன்னுரை (சைவப்பெரியார் மகத்துவம்)

சைவ மகத்துவம் என்னும் இந்நூல், ஆசிரியர் சொல்லச் சொல்ல அவரிடம் பயபக்தி பூண்டொழுகும் மாணவராகிய V.நடராசா என்பவரால் சில வாரங்களில் எழுதி முடிக்கப்பட்டது. ஐந்து தசாப்தங்களுக்கு மேலாக உகந்த வசிப்பிடமென அவரால் நேசிக்கப்பட்டு வந்ததும் ஆலய மருங்கில் அமைந்ததுமாகிய அவரது பொலிகண்டி ஆசிரமத்தில் இந்நூல் விஷயம் நீண்டகாலமாகக் கலந்துரையாடப்பட்டுத் திருத்தம் பெற்றுள்ளது. கலந்துரையாடலின் இறுதிநாளன்று அவருக்குப் பலவீன உணர்ச்சி மேலிட்டிருந்தமையாலும் கோயிலில் நிகழவிருக்கும்



திருவிழாக்களில் இடம்பெறக்கூடும் பயபக்திப்பாங்கற்ற செயல்களால் நேரக்கூடும் தொந்தரவுகளிலிருந்து சற்று விலகி யிருக்கும் பொருட்டாகவும் தமது நேச வாசஸ்தலமாகிய அவ்வாசிரமத் திலிருந்து தமது பருத்தித்துறை வீட்டுக்குச் சென்று சில காலந் தங்கியிருக்க விரும்பினார். அங்கிருத்தல் மூலம் தமது மற்றொரு பெறாமகனாகிய தணிகாசலத்துடன் நூல்பற்றி நிகழ்த்தக்கூடும் கலந்துரையாடல்களின் பேறாக நூல் மேலும் வளமுறும் எனவும் கருதியிருந்தார். எதிர்பார்த்தவாறு கலந்துரையாடல் முடிந்ததும் அவ்விடஞ் சார்ந்த முன்னைய அனுபவங்கள் அவர் ஞாபகத்துக்கு மீள்வனவாயின. தந்தையாராகிய சுப்பிரமணியம், சிறிய தந்தையாரும் எமது தகப்பனாருமான குமாரசாமிப் புலவர், சமஸ்கிருத தமிழ்ப் பேராசிரியராய் விளங்கிய எங்கள் பெரிய தந்தையார் கணபதிப்பிள்ளை, எங்கள் மாமியார் பார்வதிப்பிள்ளை என்போர்க்குத் தாம் மாணவராயிருந்தமை சார்பான நினைவுகள் அவருக்கு மீள்நினைவுகளாயின. கண்ணியத்துடனும் அன்பாதர வாகவும் அவர்கள் எல்லாரையும் நினைவு கூர்ந்தார்.

இந்நிலையில் அவரைப்பற்றிய, குடர் சம்பந்தமான சுரம் (Typhoid) அவரை நோயாளியாக்கி மூளாய் வைத்தியசாலைக்கு இட்டுச்செல்லப்பட வைப்பதாயிற்று. அங்குத் தம்மைக் கவனித்த வைத்திய கலாநிதி சம்பந்தரால் தாம் தாராள சிகிச்சை பெற்றுள்ளதாக அவர் பின்னொருகாற் போற்றியதுண்டு. நோய் குணமானதும் அங்கிருந்து தமது மாமியார் மகனாகிய சட்டத்தரணி மாணிக்கவாசகர் மகனுக்கு இடமாற்றம் பெற்று அவரினதும் பிள்ளைகளினதும் சிசுரூஷைகளால் ஆறுதலுற் றிருந்தார். மேல், அங்கிருந்து நேரே பொலிகண்டிக்கு மீண்டு சிலநாள் மாத்திரம் அங்குத் தங்கியிருந்தது அங்குத் தம்மைச் சென்றுகாணும் மாணவர் உறவினர் அனைவராலும், பருத்தித் துறைக்குச் சென்று, தங்கும்படி தெரிவிக்கப்பட்ட ஆலோசனை யை ஏற்குமளவுக்கேயாய் முடிந்தது.

பொலிகண்டியிலிருந்தபோது அவர் எனக்குத் தபா லொன்று அனுப்பியிருந்தார்.இந்நூற்பொறுப்பு முழுவதையும் நானே ஏற்றுப் பிரசுரித்தாக வேண்டுமென்பதாக அத்தபால்

கூறிற்று.

அதன்பின்னும் பருத்தித் துறையில் எனது சகோதரன் தணிகாசலத்தின் முன்னேற்றகரமான குணாகுண ஆராய்ச்சிப் பேறாக நூல் சிறிது மாற்றம் பெற்றது. பின் இது அவர் பிரியத்துக்கேற்பப் பிரதிபண்ணப்படுகையில் நான் தெரிவித்த சில அத்தகைக் குறிப்புகளும் இடம்பெறலாயின. அப்போதும் அவர் நோயாளியாகவே இருந்தார். அவரது அபிமான வைத்திய கலாநிதி சம்பந்தர், அவருக்காகக் கொழும்பிலிருந்து வேளைக்கு வேளை வந்து செல்லும் அவர் நன்மாணவர்களிலொருவரான வைத்திய கலாநிதி நிற்சிங்கம், அவ்வப்போதைய உடமைத் தேவைக்குதவும் வைத்திய கலாநிதி விசுவலிங்கம் என்போரின் தீவிர கவனிப்பிலிருந்தும் அவரது நோய்நிலை, நிற்கவோ போகவோ எனத் தெரியாமல் தயங்கிக் கொண்டேயிருந்தது. அந்நிலையிலும் அவர் இந்நூலைப்பற்றியே பேசிக்கொண்டிருப் பவரானார். முன் இடம்பெற்ற குடர் சம்பந்தமான பித்தசுரத் தாக்குதலின்பின், அவருட்பட எவரெவருந்தான் இந்நூலே அவர் சைவ உலகுக்களிக்கும் **இறுதிச் சாசனமான உயில்** எனவே கருதியிருப்பர். ஆனால், அது அப்படியாய்விடவில்லை. அந்நிலையிலும் அவர் தனது போதனைகளைக் கேட்டு அவற்றுக்கிணங்கச் சிவஞான சித்தியாரின் சாராம்சத்தை ஒரு நூலாக எழுதும்படி என்னைக் கேட்டுக் கொண்டார். அதற்கு ஒவ்வாதிருந்த தேகநிலை சார்பான அவரது இயலாமையையும் அப்பெருங் கைங்கரியத்திற்கு என் தகுதி போதாதிருந்தமை யையும் குறிப்பிட் டுரைத்தலால் எப்பயனுமாகா தென்றிரிந்தது நிலைமை. கண்ணியம் மிக்க உயர்ஞான நூலொன்றை உயர்தரமான பேராசிரியர் ஒருவர் மூலம் கேட்கவிருந்த அச்சந்தர்ப்ப விசேடத்தை ஆரவாரபூர்வமாக வரவேற்கும் அதே சமயம் அவருக்கிருந்த ஆர்வ மிகுதியால் வெகு விரைவில் அவ்வேலையில் அடியெடுத்து வைக்கத் தொடங்கி விடுவாரோ என அயிர்த்தமையால் வழக்கமான எனது சாயந்தரச் சந்திப்புகளின்போது அவர்முன் நெடுநேரம் தங்க அஞ்சுவே னாயினேன்.



இதற்கிடையில் இந்நூல் சார்பில் பிழைதிருத்தஞ் செய்ய அனுப்பப்படும் பிரதிகளில் ஒரு பகுதி சைவப்பிரகாச அச்சகத்திலிருந்து அவர் கைக்கு வந்துவிட்டது. அச்சமயம் மற்றெவரும் அவரருகி லிருந்திராமையால் தானே அதனை முழுவதும் பார்த்து முடித்துவிட்டு, நான் அவ்விடஞ் சென்றபோது, அச்சகத்துக்கு அனுப்பி வைக்குமாறு என்னிடந் தந்திருந்தார். இம்முயற்சியால், சிகிச்சைக்கு முன்னிருந்த இயலாநிலையால் தான் மீளவுந் தாக்கப்பெற்றுவிட்டதாக அவராகவே சொல்லியிருந்தார். அதன் விளைவாக நூல் முழுவதாக அச்சகத்திலிருந்து வருதற்கும் சிவஞான சித்தியார்ச் சாரம் எழுத என்னை அவர் தூண்டித் தொடக்குதற்கும் முன்னாகவே அவர்தமது அத்யந்த அன்புக்குரியதும் அதிமிகச் சிறந்ததுமான சிவனடி சேர்தலில் உன்முகப்பட்டு எழுதுகோலைக் கைவிட்டு விட்டார். என் தினசரிப் பராக்குகள் முடித்து ஒருநாள் அவரிடந் திரும்பியபோது அவர் வெற்றுடலாய்க் கிடக்கக் கண்டேன். கண்டதும், யூலியஸ் சீசர் வெற்றுடலாய்க் கிடக்க முதலிற் கண்ட மார்க் அந்தோனிக்கு, எழுந்த இதயக் குமுறலுக்கு நேரொத்த இதயக் குமுறல் எனக்கு முளதாயிற்று. விவேகத் திறமையில் அவர் சீசராகவே விளங்கியவர். சீசரைப் போலவே நியாயவீனமாக யார்க்கும் பணிந்து கொடாத திடசங்கற்பமும் நேர்மையும் வாய்ந்திருந்தவர் அவர்.

பல வருடங்களாக மேற்கொண்ட அமைதி மயமான அரும்பெரும் முயற்சிகளால் அவர் கண்ணியப்படுத்தி உயர்த்திய விக்ரோறியாக் கல்லூரி அதிபர் பதவியிலிருந்து இளைப்பாறியபின், தர்க்கம், உளவியல், கல்வி, சமயம் என்ற துறைகளில் அவர் நூல்கள் இயற்றி வெளியிட்டுள்ளார். பிரித்தானியா, இந்தியா, அமெரிக்கா என்ற நாடுகளைச் சேர்ந்த வாசக நேயர்களிடமிருந்து அவருக்குப் பெரும்புகழ் ஈட்டித் தந்த Saiva School of Hinduism என்ற அவரது நூல் தலைசிறந்த மரபுவழி நூலாக ஏற்கப்பட்டுக் காசி இந்துப் பல்கலைக்கழக மெய்யியல் ஆய்வுத்துறை மாணவர்க்குப் பாடபுத்தகமாக நியமிக்கப்பட் டுள்ளது. அது ஓரளவில் விளங்குதற்குக் கடினமானதும்

சமயத்தின் ஆரம்ப அறிவு பெறாதோர்க்கு அதீத அறிவு நூலாகவுமுள்ளது. ஆனால், சைவ மகத்துவம், சைவ தத்துவ ஞான விளக்க பரமான அதன் முதலத்தியாயம் மட்டுந் தவிர, கற்போர்க்கிலகுவான தாயுள்ளது. இந்நூலின் 2ஆவது முதல் 8ஆவது வரையிலான அத்தியாயங்கள் ஒருவரும் தவறாமல் எல்லோரும், மிகமிக நெறிகெட்ட காமாந்தகராயுள்ளளோர் கூட, பிறவிப்பயனாகிய மோட்சநெறி சாரவைக்கும் பாங்கான சைவ நடைமுறை ஒழுக்கங்களையும் அவை சார்விளக்கங்களையும் முன் வைக்கின்றன. சைவ உண்மையியல்பின் படிக்கு விட்டிற் பூச்சி போன்ற ஒரு அதி அற்ப பிராணி தானும் வீணாக வாழ்ந்தொழிவதாகாது. எந்த ஓருயிரும் தன் வாழ்க்கைச் சுழலின் பின் அதன் இலட்சியப் பேறான மோட்சமடைதற் குரியதே. இதிற் சைவத்தின் தனித்துவப் பேரழகு எளிதின் விளங்கக் காணலாம்.

இந்நூலில் மோக்ஷப் பேறடைதற்கான நடைமுறையநு சரணைகள் உத்தரவாதமுள்ள மேற்கோள்களுடன் தெரித் துரைக்கப் பட்டுள்ளன. பரமுக்தி பற்றியும் வழிபாட்டின் பலவேறுவகை பற்றியும் இந்நூலிற் காணப்படும் விளக்கம் ஆசிரியரின் சுயமான ஆக்கம் எனல் குறிப்பிடத்தகும். இளைஞர்களால், இது நமக்கு இலாபகரமானதென்ற மனத்திருப்தியுடன் கற்கப்படத் தக்கது இந்நூல். படித்தறிதற்கு அதிக விளங்குமாற்றலும் மிகுந்த பொறுமையும் வேண்டுவன வாயுள்ள கஷ்டமான சைவ நூல்கள் பலவற்றைக் கற்பதில் நேருங்கஷ்டத்தை இல்லாமற் செய்ய வல்லது இந்நூல். சைவசமயி ஒவ்வொருவனும் தன் சமயத்தை நன்கு விளங்கிக் கொள்ள வேண்டுங் கடப்பாடுண்டு.

மேலைநாட்டுக் கல்வி மோகம் அளவுக்கதிகமான அழுத்தம் பெற்றதனால் பழைய சைவ தத்துவஞான நூல்களாகிய சிவாகமங்கள்பல நெடுங்காலப் புறக்கணிப்புக்குட்பட்டு மறைந்து போய், தற்பொழுது தம் சுய உருவிற் கிடைத்தற் கரியவையாய் விட்டன என்பது அவர்தம் உணர்வின் ஆழத்திலிருந் தொலிக்கும் புலம்பலாகும். எப்படியோ ஒருவிதமாக அவற்றின் கருத்துப் பகுதிகள் வேறுவேறு பின்னைய நூல்களிற் கண்டறியப்படுமளவுக்கு இட்டுவைக்கப் பட்டுள்ளன. தேர்ந்தெ



டுக்கப்பட வேண்டுந் திறமை யாளரும் ஆசிரியத் தலைமைப் பாடு வாய்ந்தோருமான பிற்கால மேதைகள் சிலர் மறைந்த அந்நூற் கொள்கைகளை மீட்டெடுத்துத் தத்தம் நூலிற் சேர்த்து வைத்துள்ளனர் எனக் குறிப்பிடும் அவர் அத்தகையோர் ஒவ்வொருவருக்கும் ஞாபகக் கோயில் ஒவ்வொன்றெழுப்ப லாமெனப் பாராட்டியுமிருக்கின்றார். அதற்கெதிர் அவராற் குற்றஞ்சுமத்தப்பட்டோரும் உளர். இந்திய நாட்டில் இந்து சமயம் பற்றிய தமது கருத்து வெளியீடுகளின் மூலம் பரந்த பெருங் கல்வியாளரென்றிருக்கும் அரசியல் மேலாளர்கள் தாமும் இந்துக்களாயிருந்து கொண்டே தவறான கருத்துகளைப் பரப்புகிறார்கள். இந்து சமயத்தின் தனித்துவ மேன்மைகளை அறியாதிருக்கும் தமது அறிவீனத்தை வெளிப்படுத்துவதற்கோ அல்லது திட்டமிட்டு மறு சமயத்தவரைப் பிரீதிப்படுத்தும் தந்திரோபாயமாகவோ (அறியோம்) அவர்கள் அப்படிச் செய்கிறார்கள் என்பது அவர் கண்டனக்குரல். எழுந்த மானத்துக்குப் பொருத்தமற்ற வகையில் வெளியிடப்படுங் கருத்துகள் அரசியலில் மேம்பாடுற்றோர் கருத்துக்கள் என்பதற்காகப் பொதுமக்களிடையிற் செல்வாக்குப் பெற்றுவரும்நிலை இரங்கத் தக்கதாகும்; பரிதாபகரமானதாகும்.

இவ்வாசிரியர் ஒரே கருத்தை இருவிதமாகச் சொல்ல அறியார். தான் சரியெனத் தீர்மானித்ததையே சொல்வார். அவர் சொல்வது மிகக் குறைகளின்றித் தேவைக்குப் போதுமளவில் மட்டுமட்டாயிருக்கும். உண்மை என்பது மனித மகத்துவத்துக்கு மரியாதை செலுத்துதற்காகத் திரிக்கப்படக்கூடும் ஒன்றல்ல என அவர் உணர்ந்துள்ளார். தாம் உண்மையென உணர்ந்த ஒன்றையே பேச்சு மேடையிலுஞ்சரி, அச்சுப் பிரசுரங்களிலுஞ்சரி யாரும் மறுதலிக்க முடியாத தருக்க உறுதிப்பாட்டுடன் வெளிப்படுத்து பவர் அவர். அரைகுறைப் படிப்பாளர் கிளப்பும் கருத்து மோதல்களை அநாயாசமாகவே முறியடித்துவிடுவார். தாம் சரியென அறிந்ததையே சொல்லுவார். சொன்னதையே அறிவார்.(சொன்னபின் சித்தந்தடுமாறித் தன்னிலையில் தான் அலட்டிக்கொள்ள மாட்டார்) மிகத் தெளிவானது அவர் மூளை. உண்மைக்காகப் பொறிபறக்க வாதாடுமியல்பினர் அவர்.

இந்நூலுக்கு நான் முன்னுரை எழுதவேண்டுமென்பது ஆசிரியராணை, நூல் பிரசுரமாகி முடியக்காணும் நிலையில் அவர் இருந்திருந்தால் இம்முன்னுரை வித்தியாசமான ஒரு சாயல் பெற்றிருக்கும். இவ்வளவில் இந்நூல் உருவான சூழ்நிலையும் ஆசிரியரின் வாழ்க்கை இறுதியும் பற்றிய நினைவுகள் மேற்கொள்ளப்பட்டாயின, வாசகர்களுக்கிருக்கும் அவரிழப்புப் பற்றிய மனக்கிலேசத்தைத் தவிர்க்க இம்முன்னுரை பெரும் பாலும் உதவும்என எண்ணுகிறோம்.

மலாயா, இலங்கை, இந்தியா நாடுகளைச் சேர்ந்த வாசக நேயர் பலர் இந்நூற் பிரதிகளைப் பெறுதற்கு நெடுநாளாக ஆர்வங் கொண்டுள்ளனர். இதன் அச்சுப் பிழை திருத்தும் விஷயம் கவனக் குறைவுபட்ட தாயினமைக்கு வருந்துகிறேன். நூல் நூலாக வெளிவந்தாயிற்று. (இனி வருந்துவதிற் பயனில்லை)

எனது சகபாடிகளில் வித்துவான் K. நடராசாவும் பண்டிதர் S.சுப்பிரமணியமும் இந்நூலின் அம்சங்களின் அச்சுப் பிழை திருத்தியுதவியதற்காகவும் S.சிவஞானம், சகோதரி மாமி மகளும் சட்டத்தரணியுமான V. மாணிக்கவாசகர் J.P. அவர் மகள் செல்வி கனகாம்பிகை B.A., என் சகோதரன் என்போர் ஆங்கிலப் பகுதி யின் அச்சுப்பிழை திருத்தி யுதவியதற்காகவும் அவர்களுக்கு நன்றி கூறிஅமைகின்றேன்.

கு.சிவப்பிரகாசம்





# மொழிபெயர்த்தவர் முன்னுரை :

ஸ்ரீ ல ஸ்ரீ ஆறுமுக நாவலர்பெருமான் பிரதிபலித்த சைவ உணர்வெழுச்சியையும் உத்வேகத்தையும் அடியொற்றி நின்று உண்மைச் சைவ விளக்கத்துக்கு ஒல்லும் வகையால் எல்லாம் உபகரித்து வந்த யாழ்-மேதைகளில் ஒப்புவயர்வற்று விளங்கியவர் சைவப் பெரியார் சிவபாதசுந்தரம் அவர்கள். அவர்களுடைய சைவ நூல்கள் ஈடிணையற்றவை. சைவமக்களென்றுள்ளோர் சைவத்தின் தனித்துவப் பண்பாகிய சிவஞானத்தின் மகிமையை உள்ளவா றுணர்ந்து உலகமயலால் விளையும் போலி ஒழுக்கங்களுக்குள்ளாகி நலியாது ஆசார சுத்தமான சிவநெறியிலொழுகிக் கடைத்தேற வைக்குங் கருணையுள்ளம் படைத்தவர். அதற்காகவே வாழ்ந்தவர் எனல் மிகையாகாது.

அவரியற்றி உலகுக்களித்த சைவ நூல்கள் அகிலபிரசித்த மானவை. அவர் தமது அந்திம காலத்தில் அசாமானியமான அளவுக்கு ஆரோக்கியக் குறைவுற்றிருந்த போதிலும் சைவத்துக்குதவும் ஆவல் மேலீட்டால் ஆங்கிலத்தில் ஆக்கிவைத்துச் சென்ற நூல் **The Glories of Saivism** என்பதாகும். இதன்கண் அவர்கள் சைவத் தனித்துவப் பண்புகளான மகிமைகள் பலவற்றையும் எட்டு அத்தியாயங்களிற் சுருங்கக்கூறி விளக்கியுள்ளார்கள். இவர் கூறுங் கருத்துகள் மற்றும்பல சைவநூல்களிலும் இருப்பதுண்டு. ஆனால், அக்கருத்தம்சங்களை அவர் தாம் தரிசிக்கும் முறையும் வாசகர்களைக் கொண்டு தரிசிப்பிக்கும் முறையும் இந்நூலுக்கே தனித்துவமானவை. சொல்லுங்கருத்துகளுக்கு அழுத்தங் கொடுக்கும் தருக்க உத்தி முறையும் அத்தகையதே.

கணிதவியல், சமயவியல்களோடு உளவியல் துறையுங் கரைகண்டவராதற்கேற்ப, தம் நூலாற் பெரிதும் பயன்பெற வேண்டிய தற்காலத்தவர்க்குப் பிரீதியாகும் நவீன அறிவியற் போக்குக்கிணங்கும் வகையில் சைவ நுண்பொருள் விளக்கங்களை நூதனமான உதாரணங்களில் வைத்து அவர் விளக்கியிருக்கும் திறம் அபூர்வமானது!

சைவநுண்பொருள் விளக்கக் குறைவினாலே சைவ வழிபாட்டின் யதார்த்தத்தைப் புரிந்து கொள்ள மாட்டாதனவாய்ச் சைவாலயங்களும் தம் வளாகத்தில் லௌகிகப் பிராந்தி மிகுவிக்கும் நவீனர் கைப்பட்டுத்

திண்டாடும் இந்நாளில் இந்நூலின் சேவை மிக முக்கியமான ஒன்றாயமையும்.

எனினும், இது ஆங்கிலத்தில் இருத்தல் காரணத்தாற் சைவ சமூகத்திற் பெரும்பாலோர் இதனாற் பயன்பெறுதல் இயலாதாகின்றது. இந்நோக்கில் இதனைத் தமிழில் மொழிபெயர்க்கலானோம். சைவமகத்துவம் என்ற இந்நூலுக்கு இதன் ஆசிரியர் சைவப்பெரியார் மகத்துவமே பேசும் முன்னுரையும் வாய் திறந்திருத்தல் மகா விசேடமாகும்.

**சைவப் பெரியாரின் அபிமான மாணவர்களாய் அவர்பேரிலான அறக்கட்டளை மூலம் அவர் சேவையருமையைப் பேணிப் போற்றி வரும் மலேசிய அன்பர்கள் இதனை வெளியிட இசைந்து முன் வந்தமை சைவத்துக்கோர் அரும்பெரும் பேறாகும்.**

**அவர்கள் இத்தகு பணிகளில் மேன்மேலும் முன்னேறத் திருவருள் முன்னின்றுதவ வேண்டுமெனப் பிரார்த்திக்கின்றோம்.**

***மு.கந்தையா***



*அத்தியாயம் ஒன்று*

## *சைவம்*

வேத சிவாகமங்களைச் சிவன் வாக்கான பிரமாண நூல்களாக ஏற்றுக் கொண்டமைவோரின் சமயம் சைவம்.

இவற்றுள் வேதம் உலகினர்க்குப் பொது நூலும் சிவாகமம் ஆன்ம தாகம் கொண்டவர்க்குச் சிறப்பு நூலுமாம். நால் வேதங்களும் இன்னும் நிலைத்துள்ளன; அவ்வாறில்லாது சிவாகமங்களிற் பல மறைந்து போயின. அருணந்தி சிவாசாரியார் சகலாகம பண்டிதர் என்ற விருது பெற்றிருந் துள்ளமையாலும் தமது அரும்பெரும் ஆக்கமாகிய சிவஞான சித்தியார் எனும் நூலில் அவர் சிவாகமங்கள் பலவற்றின் கருத்துக்களை வெளியிட்டிருப் பதனாலும் அவர் படித்தறியத் தக்க வகையிற் (மறைந்த) சிவாகமங்கள் பல அவர் காலத்தில் வழக்கில் இருந்துள்ளன எனலாம். அவர்தம் நூலில் வெளியிட்டிருக்கும் சைவசித்தாந்தக் கருத்தமிசங்கள் பதினேழு சிவாகமக் கருத்துக்களுடன் ஒப்புமை யுள்ளனவாயிருப்பதாக உரைகாரர் குறிப்பிட்டுள் ளார்கள். அதனால், அவ்வுரைகாரர் காலத்தும் அவை வழக்கில் இருந்துள்ளன எனலாம். சிவஞானசித்தியார் அன்றியும் சிவஞான போதம் என்ற சித்தாந்த நூலும் நமக்குளது. அது ரௌரவாகமத்தின் ஒரு பகுதியாகக் கருதப்படுவதால் அதுவும் சிவாகம சாரமேயாம். அப்பகுதியை மெய்கண்டார் தமிழில் தந்து பொழிப்புரையும் வழங்கியுள்ளார்.

தமிழிலுள்ள இவ்விரு சித்தாந்த நூல்களும் சிவாகமங்களின் ஞானபாதப் பொருளை உட்கொண்டவை. இவையன்றியும் சைவசித்தாந்த நூல்கள் தமிழிற் பன்னிரண்டுள. அவை இவைகளுக்கு அனுபந்தங்களாய்க் கொள்ளப்பட்டுச் சித்தாந்த சாஸ்திரம் பதினான்காயிற்று. அவற்றுள், இருபா விருபஃது என்ற நூல் அருநந்திசிவாசாரியராலேயே இயற்றப் பெற்றது. ஏனையவற்றில் ஏழு அல்லது எட்டு நூல்கள் அவரின் சீடரின் சீடரான உமாபதி சிவாசாரியார் என்பவரால் இயற்றப் பட்டன.

திருமூலர் இயற்றிய திருமந்திரம் என்ற நூலும் சைவசித் தாந்த ஞானநூலே. அது இற்றைக்கு இரண்டாயிரமாண்டு களுக்கு முன் இயற்றப்பட்டதாகக் கருதப்படுகிறது. இப்பதினைந்து நூல்களும் சிவாகமத்தின் ஞான பாதத்தின் இடத்தில் வைத்துப் போற்றத் தகுவன.

சைவஞானம் உலகுக்கொரு கடவுளுண்மையை ஸ்தாபிக்கின்றது. அத்துடன் அதற்காதாரமான காரணங்களை யும் விளக்குகிறது.

இந்தப் பிரபஞ்சம் மாற்றமுறும் ஒன்றாயுள்ளது. பொதுவில் ஒவ்வோர் மாற்றத்துக்கும் ஒவ்வோர் காரணம் இருந்தாவதுண்டு. ஆகையால் இப்பிரபஞ்ச மாற்றத்துக்கும் ஒரு காரணம் இருந்தாக வேண்டும். அக்காரணம் இப்பிரபஞ்சத்துக்கு வேறான ஒன்றாயும் இருக்க வேண்டும். அதுவே கடவுள் எனப்படுகின்றது.

இருந்தும் மாற்ற முறுவது பிரபஞ்சத்தின் இயல். அதற்கு மாற்ற காரணமாகவே வேறொன்று வேண்டியதில்லை என்ற வாதமும் முன் வைக்கப்படலாம்.[1]

ஆனால், மாற்றம் பொருளின் இயற்கையாதல் கூடாது. ஏனெனில், முதலாவதாக, ஏதொன்றும் தன்னில் தானே மாற்றமுற யாம் கண்டதில்லை. தன்னின் வேறான ஒன்றின் செயற்பாட்டுக் கிடமாகாத வரை ஒவ்வொன்றும் தன்னியல்புடனேயே இருக்கிறது. இன்னொரு காரணத்தால் மேலுங் குளிரச் செய்யப்படாதவரை தண்ணீர் பனிக்கட்டியாகாது தண்ணீரா கவே யிருக்கிறது. இரண்டாவதாக மாற்றம் பொருளுக்கியற்கை யெனில், ஒவ்வொன்றும் மற்றொன்றின் தொடர்பின்றி, எழுந்த

*1. பிரபஞ்சத்தில் நேரும் மாற்றம் அதன் இயற்கை என்பதாயின் பொருளியல்பில் மாற்றம் என ஒன்று இல்லையாதல் வேண்டும். அத்துடன், பொருளின் இயற்கையே மாற்றமயமாயிருப்பதால் அது மாறுகின்றதெனில், பொருளுக்கு இயற்கை என்பதொன்று இல்லை யென்றாகிப் பொருளென ஒன்றில்லை என்றேயாகும் என்றவாதத்தை எதிர்நிறுத்தி அதனை மறுக்கின்றது சிவஞானசித்தியார்.*



மனத்துக்குத் தொடர்ந்து மாறிக்கொண்டிருக்க வேண்டும். அதற்கியைய மனிதனொருவன் திடீரென ஒரு தூணாக மாறினாலுங்கூட நாம் அதிசயமுற வேண்டியிருக்காது. மூன்றாவதாக, மாற்றம் பொருளின் இயற்கையாகவே இருந்தாக வேண்டுமெனில் ஏதொரு பொருளும், இன்னது இதுவென இனங்காணப்படுந் தன்மையை யிழந்து தன் நிலையில் தொடர்ந்திருக்க இயலாதாய் மற்றொரு பொருளாய் விடுந் தன்மை நேரும். ஆதலால், மாற்றமுறுதல் பொருளியல் பெனல் ஆகாது. உதாரணமாக, சற்சதுரமொன்றின் செங்கோணங் களிலொன்று கூர்ங் கோணமாக மாறுமாயின் அது மேலுஞ் சற்சதுரமாதல் கூடாது. சாய்சதுரம் என்ற மற்றொன்றாகி விடும். அப்படியான கோணமாற்ற மொன்றில்லாமல் சற்சதுரமொன்று தானே சாய்சதுரமாக நாம் கண்டிலேம். ஆகையால் மாற்றம் பொருளின் இயல்பாதல் கூடாது. எனவே, பிரபஞ்சத்திற் காணும் மாற்றம் அதன் இயற்கையன்றாம். அது பிரபஞ்சமல்லாத மன்றொன்றால் நிகழ்வதாதல் வேண்டும். அம்மற்றொன்றே கடவுள் என்க.

[2]அவயவப் பகுப்பற்றதான பிரபஞ்சத்தில் மட்டும் மாற்றம் நிகழ்வதென்றில்லை. ஒரு காலத்தில், இப்பூமி சூரியனில் ஒரு பகுதியா யிருந்துள்ளது. அதிலிருந்து பிரிகையில் இது ஒரு அக்கினிப் பிழம்பாகவே இருந்திருக்கும். அவ்வக்கினிப் பிழம்பில் உயிர் இருத்தல் அசம்பாவிதமே. ஆனால், இப்போது அது நிலைத்திருக்கக் காண்கிறோம். இது ஒரு மாற்றத்தின் விளைவாகும். சாதாரண உயிர் மட்டுமல்ல; மனிதன் போல அவ்வளவுக்கு வியத்தகு விருத்தி பெற்ற உயிர்கள் கூட, சாதாரண மனிதன் என்ற அளவில் மட்டுமல்ல, ஐன்ஸ்ரீன், ராமானுஜம் என்போர் போன்ற விவேகாதிசயம் விளைக்கும் மனிதர் கூடத் தோன்றி விட்டார்கள். இங்ஙனம் வாழ்வுக்கு லாயக்கற்ற ஒரு நிலையிலிருந்து ஐன்ஸ்ரீனின் விவேக விருத்தி நிலை விளக்கு

2. தனித்தனிப் பகுதிகளாகப் பருக்கக்கூடியதாதல் இன்மை

மளவில் ஏற்பட்டிருக்கும் இது பிரமாண்டமான ஓர் மாற்றமே. இம்மாற்றம் எல்லாமறியும் ஆற்றலினதாகவுள்ள ஒன்றினாலேயே நிகழ்ந்திருக்க வேண்டும். அதனையே சைவம் கடவுள் என்கின்றது.

நம்மையும் நமதுடைமைகளையும் நாம் பாதுகாத்துக் கொள்ளவேண்டிய தேவை இருப்பதிலிருந்து கடவுளுண்மையில் நம்பிக்கை வைக்க வேண்டுதற்கான காரணம் புலனாகும். தானும் தன் உடைமைகளும் பாதுகாப்பாயிருப்பதையே ஒருவன் விரும்புகிறான். தன் உடைமைகள் திருடப்பட்டாதலை எவனுமே விரும்புவதில்லை. தானும் தன் உடைமைகளும் பாதுகாப்பாயிருக்க வேண்டுமேல் மனிதன் எது சரி என்பதை அறிந்து அதை அனுசரிக்கும் கடப்பாடுடையவன் ஆகவேண்டும். கடவுள் நம்பிக்கையோடு யாதானுமொரு சமயத்தை அநுசரிக்கும் ஒருவன் அச்சமயத்துக்குரிய வேதத்தின் மூலம் சரி எது என்பதை அறிந்து அதற்குக் கட்டுப்பட்டொழுகுவோன் ஆவான்.

'எதிக்ஸ்' எனப்படும் ஒழுக்கவிதி வழங்கும் நீதி சாஸ்திரம் சரி பிழைகளைப் பகுத்துணர்த்துந் தன் முயற்சியில் மிக மோசமான அளவுக்குத் தவறுபட்டிருக்கிறது. இச்சாஸ்திரத்தினால் முன் வைக்கப்பட்டுள்ள ஒழுக்க விதி ஒவ்வொன்றுமே ஸ்திரமற்றதாயுள்ளது. 'உன்னையும் உன் உடைமைகளையும் பாதுகாக்கும் உரிமை உனக்குள்ளதாக நீ கோருவது போல மற்றவனும் தன் விஷயத்தில் அப்படிக் கோரும் உரிமை உண்டுதானே. ஆதலால், நீ மற்றவனின் உரிமையையும் மதிக்க வேண்டியவனாகின்றாய்' என நாஸ்திக னொருவனுக்குச் சொல்கையில் அவன் பதில் யாதாகும்?

'சரி என அப்படியொன்றில்லை. என் பலத்தினாலல்லாமல் நான் என் பாதுகாப்பை உறுதிப்படுத்த முடியாது. என் உடைமையைப் பாதுகாக்கும் பலம் எனக்கிலாப் பட்சத்தில் நான் அதை இழப்பவன் ஆவேன். மற்றொருவனது உடைமையையும்



யையும் சுவீகரிக்கும் பலம் எனக்குள்ளபோது நான் அதையும் எடுத்துக்கொள்வேன். பலம் என நான் கருதுவது எனதும் எனக்குதவத்தக்கோர்களதுமான ஆற்றலை. எனக்காதரவானதாய் இருக்கும் பட்சத்தில் அரசின் பலமும் இதிலடங்கும். என் பாதுகாப்பு உறுதிப்படுத்தப்பட்டதாயிருக்கும் பட்சத்தில் என் நலங்கருத நான் யாரையும் கத்தியால் குத்தலாம், கொலை செய்யலாம்; திருடலாம் அல்லது கொள்ளையடிக்கலாம்; ஒரு வீட்டை உடைக்கலாம் அல்லது அதற்குத் தீ வைக்கலாம்; உயர்தர நாகரிக நாடுகளான இங்கிலாந்து, அமெரிக்கா, பிரான்ஸ், ஜெர்மனி எனும் நாடுகள் கூடப் பலமே மேலான மத்தியஸ்தர் என்ற நோக்கிலேயே இந்நூற்றாண்டில் இருபெரும் உலக மகாயுத்தங்களை நிகழ்த்தியிருக்கின்றன. எனவே, அறிவுணர் வுள்ள எவனொருவனுந்தான், 'பிறர் உனக்குச் செய்ய வேண்டும் உபகாரம் என எதை விரும்புகிறாயோ அதை நீ அவர்களுக்குச் செய்' - என்ற உனது போதனையை ஏற்க மாட்டான். பலவீனரும் குழந்தைத்தனமான புத்தியாளர்களுமாய் உள்ளோரின் போதனையே அது. நீ கூறும் நியாய உணர்வுக்கிணங்க நீயே நடக்கக் காணோம். உனக்குள்ளது போலவே ஆட்டுக்குட்டியொன்றுக்கும் இங்கு வாழும் உரிமை உண்டு. இருந்தும், உனக்குப் பலமுண்டென்ற காரணத்துக்காக அதை நீ கொன்று புசிக்கின்றாய். நாஸ்திகன் ஒருவன் உனது ஒழுக்கப் போதனைகளுக்கு எவ்விதத்திலுங் கட்டுப்பட வேண்டியவனாகான்' - என்றிருக்கும் அவன் பதில்.[3]

நீதி ஒழுக்க விதிகளை ஒத்துக் கொண்டதற்கு முன்னோடியாக, ஒருவன் கடவுளுண்மையையும் வேதங்க ளுண்மையையும் அடிப்படை நிபந்தனைகளாக ஏற்றுக்கொள்ள

3. ஆனால் நாஸ்திகருள்ளும் நேர்மையைக் கடைப்பிடிப்பவர்களும், சுயநலத் தியாகிகளும் இருக்கின்றார்கள். அது அவர்களின் உள்ளார்ந்த உளவியல்பு, பண்பாடு, அவை சார்ந்த உயர்ரகமான தார்மிக விளக்கத்தகுதி முதலியவற்றின் விளைவாகும். அதற்கெதிர் தமது உள்ளார்ந்த உளவியல்பு முதலியவற்றால் நீதி ஒழுக்கக் கடைப்பிடி இல்லாத ஆத்திகரும் உளர்.

வேண்டும். இறைவன் சொன்ன விதி அறம், என்கின்றது சிவஞான சித்தியார். சைவ சமயம் ஒன்றே கொலை, மற்ச மாமிசம் புசித்தல், மதுவுண்ணல் முதலிய சகல தீங்குகளையும் செய்யத்தகாதன வெனத் தடுத்திருக்கிறது என்பது இங்குக் கவனிக்கத்தகும்.

எனினும், 'எனக்குக் கடவுள் வேண்டியதில்லை, எனக்கு மனச்சாட்சி உண்டு. எது சரி, எது பிழை என்பதை அது சொல்லும் நான் அதற்குக் கீழ்ப்படிவாக நடக்க முயல்வேன்' என்பாரும் உளர். ஆனால், மனச்சாட்சி என்பது ஒரு கற்பனை. மனிதன் ஒருவன் மனச்சாட்சி என்று சொல்லிக்கொள்வது அவனது எண்ணங்களையும் அறிவையும் அடிப்படையாகக் கொண்டெழும் அவனது புத்தி நிச்சயமேயல்லது வேறில்லை. ஒரு காலத்திற் கைக்கூலி வாங்குதலை வெறுத்திருந்தோர் பின் அதில் ஆர்வமிகு பக்தர்களாகின்றனர். இதை மனச்சாட்சிப் பெயரிற் சார்த்தி நோக்குகையில், ஒரு காலத்தில் அவர்கள் மனச்சாட்சி கைக்கூலியை அங்கீகரித்திலது; பின் ஒரு காலத்தில் அதையே அங்கீகரித்துள்ளது. மாமிச உணவில் விடாப்பிடியாக இருந்தோர் பின் தாவர உணவில் விடாப்பிடியாளராக மாறுகிறார்கள். அதாவது ஒரு காலத்தில் அவர்கள் மனச்சாட்சி தாவர உணவை அங்கீகரித்தேற்றிருந்தது. அதுவே மற்றோர் காலத்தில் அதைக் கண்டித்து ஒதுக்கியிருக்கிறது. மேலும், அரசியல் தேவைகளுக் காக ஒருவரின் மனச்சாட்சி கொலையை விரும்பியேற்பதும் மற்றொருவரின் மனச்சாட்சி அதனை அருவருத் தொதுக்குவதும் உண்டு. இங்ஙனம் ஒருவனிடத்தில் உள்ள மனச்சாட்சி கால வேறுபாட்டில் வித்தியாசமுறுதலும் இருவரிடத்தில் அது சமகாலத்திலேயே மாறுபடுவதுங் காணலாம். ஆகையால் மனச்சாட்சி என்பது முற்று முழுதாகவே நம்பத்தகாத வொன்றாம். நல்லொழுக்க நெறி, சமய அநுசரணையில் மாத்திரந் தங்கியி ருக்கும். அதனால் அதைப் பேணும் நோக்கில் கடவுளுண்மை ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும்.



இங்ஙனம் கடவுளுண்மையை ஏற்கவேண்டியதன் தேவையை எடுத்துணர்த்தி, கடவுள் ஒருவரே எனவும் எமது சைவஞானம் பேசுகிறது. பிரபஞ்சத்தில் மாற்றம் நிகழ்வது பற்றி விளக்கும் பாங்கில் முதலில் கடவுளுண்மை என்ற முடிபுக்கு வந்தோம். இதன் மூலம் அவரே உலகை நடத்துபவர் என்றாகிறது. ஒவ்வொன்றும் சுதந்திரமாக உலகை நடத்தும் இருபொருள் இருக்க முடியாது. ஆதலால், 'உலகுக்குக் கடவுள் ஒன்றே. ஆனால், ரிஷிகள் அதைப் பல பெயர்களால் அழைக்கின்றார்கள்' என வேதங் கூறிற்று.[4]

நாங்கள் யாவரும் உயிர்கள். உயிர்கள் யாவும் உள்பொருள்கள்.உள்பொருள்களொன்று மற்றொன்றிலிருந்து தோன்றுவதாகாது. அவயவப் பகுப்பற்றதாயுள்ள உள்பொருள் அநாதி. உயிர் அவயவப் பகுப்பற்றது. அதனால் அது அநாதி என்பது சைவ போதனையின் இரண்டாவது கூறாகும்.

ஆனால், உடலுக்கு வேறாக உயிர் என ஒன்றின் இருப்பை மறுத்து உடலே உயிர் எனக் கருதுவாரும் உளர். மூளை சார்ந்த நரம்புத் தொகுதியின் இயக்கத்தினாலே நினைவு நிகழ் கிறதாகக் கொள்ளுகிறார்கள் அவர்கள். ஆனால், நரம்புத் தொகுதி என்பது வெறும் இரசாயனப் படைப்பு. ஆகையால் அது அறிவற்ற சடம். ஒருவன் ஏழுதர பன்னிரண்டு எண்பத்து நான்கு என்பதைப் பலதரம் பயின்று கொண்டிருப்பானாயின் அவ் வுண்மை, ஏழுதர பன்னிரண்டெது என அவன் நினையுந்தோறும் அவனுக்குத் தோன்றிக்கொண்டிருக்கும். ஆனால், சிக்கலான கணிதப் பிரச்சினைகள் அவ்வாறான நரம்புப் பயிற்சியால் தீர்க்கப்பட முடியாது. ஆகையால், இப்படியான காரியங்களை முடித்தற்கு உடலுக்கு வேறான மற்றொன்றின் இருப்பு அவசிய மாதல் அறியப்படும். இவ்வகையில் உடலில் இருந்து கொண்டு, தெரிந்து செயற்படுவது உயிர் எனச் சைவஞானம் பேசும்.

4. உமை, விநாயகர், சுப்பிரமணியர் என்பன சிவனை உணர்த்தும் பெயர் விகற்பங்கள். ஒவ்வொன்றும் அவரின் அம்ச வேறுபாடுகளைக் குறித்தெழுந்ததாம்.

அங்ஙனமாகவும், பிரச்சினைகளுக்குத் தீர்வு காணுஞ்செயல் மனத்தினால் நிகழும். ஆதலால் தீர்வு காண்பது என்ற காரணத்துக்காக உயிரின் இருப்பைப் பற்றிய பிரஸ்தாபம் வேண்டப்படாது என மற்றோர் பகுதியினரான தத்துவஞானிகள் கூறுவர். அவர்கள் கருத்தை மறுக்கு முகமாக, மனம் என்பது ஒரு கருவி மாத்திரமே யன்றிக் கர்த்தாவாகாது என்றுரைக்குஞ் சைவ ஞானம். நாங்கள் எங்கள் மனத்தைப் பல விதங்களிற் கட்டுப்படுத்துகின்றோம். மனம் சோம்பற் சார்புள்ளதாயிருக் கையில் தொடங்கின அலுவலில் தொடர்ந்தியலும்படி சில வேளைகளில் நாம் அதற்கு அழுத்தங் கொடுக்கிறோம். நம்மிஷ்டத்துக்கு இசையாவிதத்தில் அது தவறான செயலில் முனையும்போது அதை நாம் திருத்துகிறோம். இவ்வாற்றால் மனம் ஒரு கருவியே யன்றிக் கர்த்தா ஆகாமை பெறப்படும். நமது தத்துவ ஞானம் கர்த்தாவாகக் கொள்வது உயிரையே. மனமும் உடம்பும் அதன் கருவிகள்.

எமது அறிவு மிகவும் மட்டுப் படுத்தப்பட்ட ஒன்றென லும் நாம் அறிவோம். அறிவெல்லையைக் கடந்த அற்புதக் காட்சி களுமுள. பெரும்பெரும் விஞ்ஞானிகளும் அவற்றை இனங் கண்டு விளக்கமுடியா திருக்கின்றனர். இதனால் நாங்கள் எல்லாமறிந்தவர்கள் ஆகோம் எனல் விளங்குகின்றது. நாம் வகை வேறுபட்ட அறிவுடையார்களைக் காண்கையில் காட்டுவாசி யொருவன் ஒரு துளியறிவு மட்டும் உள்ளவனாக, சாமானிய பட்டதாரி ஒருவன் கிணறளவு அறிவுள்ளவனாக, பேராசிரியர் ஒருவர் கடலளவு அறிவுள்ளவராக, இராமன் என்ற ஒரு மேதாவி சமுத்திரமளவு அறிவுள்ளவராக இருக்கக் காண்டலிலிருந்து எல்லாமறியுந் தகுதி உயிருக்குள தென நாம் அனுமானிக்கக் கூடியதாயிருக்கிறது. இருந்தும் மனிதர் எல்லாமறியும் நிலை இல்லாதோரா யிருப்பதிலிருந்து இவ்வாற்ற லைக் கீழறுக்கும் சக்தி ஒன்றிருப்பது தெரிகின்றது. எங்கள் தத்துதவஞானம் அச்சக்தியை ஆணவம் என்கிறது.



எமது தத்துவ ஞானந் தெரிவிக்கும் அடுத்த விஷயம் சடப் பிரபஞ்சத்தின் முதற் காரணம் பற்றியதாகும். காணப்படும் பிரபஞ்சத்தின் முதற்காரணம் அணுக்கள் எனக் கருதப்பட்ட காலமுமொன்றிருந்துள்ளது. அதைக்குறித்துச் சிவஞான சித்தியார் விமர்ச்சிக்கையிற், 'காரியம் என்பதென்னை? காரண அணுவை யென்னிற் காரியம் அவயவத்தாற் கண்டனம்' என விளக்கியுள்ளது. அணுக்கள் தம்மளவிலேயே பல அவயவங்க ளான கூட்டுப் படைப்பாயிருத்தலால் அவை பிரபஞ்சத்துக்கு முதற்காரணமாகா, முதற்காரணமாகத் தக்கதொன்று அவயவங் களின் கூட்டமாகாத ஒரு தனிப் பொருளாதல் வேண்டும். பிரபஞ்சஞ் சார்ந்த வகையில் அதை மாயை என்கிறது எங்கள் தத்துவ ஞானம்.

உயிரானது தன்னை மூடியிருக்கும் ஆணவ மறைப் பைப் படிப்படியாக விலக்கப்படுதல் மூலமே பூரண அறிவு விளங்கத் தக்கதாகின்றது. இதனை அது அநுபவத்தினால் மட்டுமே எய்த முடியும். முற்றிலும் புதுவதான ஒரு சூழ்நிலையில் விடப்படடிருக்கும் போது ஓர் உயிர் சரியான செயற்பாட்டுக்குத் தன்னை இசைவித்துக்கொள்ள இயலாததாய்த் தவறு செய்கின்றது. அதன் விளைவாகத் துன்புறுகையில் தான் தன்னை இசைவுத்துக் கொண்டிருக்கும் நிலையில் ஏதோ தவறுண்மையைக் கண்டறிகிறது. அதன் பேறாக முன்னையது போன்ற மற்றொரு சூழ்நிலை அமைகையில் தானறிந்திருந்த தவற்றைத் திருத்தி நல்ல மாதிரியான ஒரு இசைவு நிலையை ஆக்கிக் கொள்கின்றது. ஆனால், இவ்விசைவு நிலையுங்கூட மிகச் சரியானதாக அமையாமையால் அதன் விளைவாக அது மேலுந் துன்புறுகின்றது. அந்நிலையில் மற்றோர் தவறிருப்பக் கண்டறிகின்றது. இவ்வகையில் தடவைக்குத் தடவை தவறுகளைக் கண்டறிந்து வருதல் ஆன்ம அறிவுக்கு நிரந்தரமாய் நின்றுதவவல்லதோர் அநுபவமாகும்.இதைத் தத்துவ ஞானபரி பாஷையில் இட்டுரைக்கின் :

இயல்பாக நாம் புரியுஞ் செயல்கள் கர்மங்கள். அக் கர்மங்களின் பலாபலன் அநுபவம், அது நமதறிவுக்குப் புதுச் சேர்க்கையை விளைக்கிறது. இவ்வகையால் அடையப் பெறும் அறிவு நமக்குள ஆணவ மறைப்பைச் சற்றே விலக்கித் தருகிறது. அறம் எனப்படும் நிலைக்குரிய சமய தர்மப் பின்னணியில் நிகழுஞ் செயல்கள் மட்டுமே எங்கள் தத்துவ ஞானத்திற் கர்மம் எனப்படும் என்பதை இங்கு கருத்திற் கொளல் வேண்டும். கணிதப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணல், நூல் நூற்றல் போல்வனவாம் சாமானிய செயல்கள் தத்துவஞான நோக்கில் கர்மங்களாகா. இந்நூலில் அவை செயல்கள் என்றே ஆளப்படும். இரண்டாவதாக கன்மபல அநுபவத்தாற் பெறப்படும் அறி புத்தியால் நிச்சயித்துக் கொள்ளும் விஞ்ஞான அறிவு போலாது, முழுமையான அறிவாகும். விஞ்ஞான அறிவிற் பெருங்கடலாயிருக்கும் ஒருவன் ஆன்மிக அறிவில் காட்டுமிராண்டியொருவன் தரத்திற் குறைந்தவனாதலுங் கூடும்.

நாம் பெறும் அநுபவங்கள் மூவேறு காரியங்களின் விளைவாயுள்ளவை. பிராப்தமெனப்படும் நமது பழவினை அவற்றுள் ஒன்று. நமது இப்பிறப்பிற் செய்யப்பட்ட திருஷ்ட ஆகாமிய மெனப்படுங் கர்மப்பகுதி இரண்டாவதாம். கர்மாநுபவங்களை அடைவதற்காம் உபாயமாக அவ்வப்போது நாம் மேற்கொள்ளும் உடல், உளமுயற்சி மூன்றாவதாம். இவற்றின் தாக்கங்கள் ஒன்றையொன்று விலக்குவனவாகா. ஒன்றை மற்றொன்று எதிர்பதாயிருக்கும். இதற்குதாரணம் வருமாறு : பிராரப்தமான பழவினையின் விளைவாக என்வீடு தீப்பற்றி எரிகிறது, நல்லதொரு திருஷ்ட கருமத்தின் பலனாக, கல்யாண ஊர்வலம் போன்ற ஒரு ஏதுவின் மூலம் பெருந்தொகை மக்கள்அங்கு வந்து சேர்கிறார்கள். அவர்களால் உடனடியாகவே நெருப்பு அணைக்கப்பட்டாகிறது என்று வைத்துக் கொள்வோம். இவ்விஷயத்தில் திருஷ்டம் என்ற கர்மபலன் பிராரப்த கர்ம



பலனை எதிர்க்கிறது.* இனி மறுபக்க நோக்கில், வீடு எரிந்து சாம்பலாயிற்றெனில், கஷ்டப்பட்டுழைக்கும் பணங்கொண்டு நான் அதைத் திரும்பவும் கட்டிக்கொள்ள முடியும். குறியீட்டுப் பாஷையில் எமது அநுபவம் Y என்ற எழுத்தாலும் நமது திருஷ் ஆகாமிய கர்மம் X என்ற எழுத்தாலும் நமது உழைப்பு Z என்ற எழுத்தாலும் பிராரப்தம் C என்ற எழுத்தாலும் குறிக்கப்படில் இதன் வாய்பாடு Y = X + Z + C என்றமையும். இது காட்டுவதென்னெனில் இவ்வுலகில் எந்த அளவுக்கு நாம் திருஷ்ட ஆகாமிய கர்மத்தைச் செய்கிறோமோ அந்த அளவுக்கு நாம் கடும் உழைப்பாளிகளாக, எமது அநுபவமும் அந்த அளவுக்கு இன்பகரமாயமையும் என்பதாம். எமது தத்துவ ஞானம் கடின உழைப்புக்கு வலுவான தூண்டுதல் கொடுத்தல் காணலாம்.[5]

தவறான கர்மங்களின் பலன் துன்பம், சரியான கர்மங்களின் பலன் இன்பம். இது கர்மநியதி. துன்பாநுபவம் சரியான விளக்கத்தைக் கொடுக்க இன்பாநுபவம் அதை உறுதி செய்யும். இக்கர்ம விளைவுகள் அவ்வக்கர்மஞ் செய்யப்பட்ட கையோடு செய்தவரின் அநுபவத்துக்கு வருமாறில்லை. கர்மநியதி கடவுளாற் கவனித்து நடத்தப்படுகிறது. ஒரு கர்மத்துக்கான துன்ப பலனோ இன்பபலனோ எப்பொழுது கொடுக்கப்பட்டால் சம்பந்தப்பட்ட உயிரின் உயர்நன்மைக்காகக் கூடுமோ அப்பொழுதே கொடுக்கப்படுகிறது. கர்மம் செய்யப் பெற்ற பிறப்பிலேயே செய்த உயிருக்கு அதன்பலன் கிட்டுமானால் அது திருஷ்டம் எனப்படும்; அடுத்துவரும் மறுபிறப்பொன்றிற் கிட்டுமானால் அது அதிருஷ்டம் எனப்படும். ஒரே கர்ம பலனில் ஒரு

* விசேடக்குறிப்பு :
மூலத்தின் 11ஆம் பக்கம் 2ஆம் பத்தியிற் சொல்லப்பட்டிருக்கும் அதிருஷ்ட கன்மபலம் இலக்கணப்படி இது அதிருஷ்ட கன்மபலனாதற்கே பொருந்தும். திருஷ்டகன்ம பலனுக்கு அங்கே சொல்லப்பட்ட விளக்கத்துக்கும் இது மாறுபடுகின்றது. இது ஆராயத்தகும்.

5. "தெய்வத்தா லாகா தெனினும் முயற்சி தன்
மெய்வருந்தக் கூலி தரும்" - என்கிறார் திருவள்ளுவர். இவை கர்ம பலன்கள் எனப்படும்.

பகுதி ஒரு பிறப்பிலும் மற்றொரு பகுதி மற்றொரு பிறப்பிலும் நேர்வதனால் அது திருஷ்டா திருஷ்டம் எனப்படும். அநுபவமாக நாம் பெறும் செல்வம் அல்லது வறுமை; நஷ்டம் அல்லது லாபம்; சௌக்கியம் அல்லது நோய் என்ப வற்றில் எதுவொன்றும் ஒன்றில் நமது செயல் காரணமாக அல்லது கர்மங்காரணமாக வருவதாம். கருதிய சிலவற்றைப் பெறும் நோக்கில் மக்கள் கடவுளை வேண்டுவர். அவர்கள் வேண்டியவற்றைப் பெறும் பட்சத்தில், அது ஒன்றில் அவர்களது கர்மநியதிப் பிரகாரம் கிடைத்ததாகலாம் அல்லது அவர்கள் உழைப்புக்கான உபகாரமாகலாம். அன்றி, அவர்கள் பிரார்த்த னைக்குப் பிரதிபலன் ஆகாது. வெறும் வேண்டுதலுக்காக எவனொருவனும் கடவுளிடமிருந்து ஏதொன்றும் பெறுவ தில்லை.

மக்கள் பலர், 'வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்' என்ற தேவார வார்த்தைக்குத் தவறாக அர்த்தங் கொண்டு கடவுளை இசுத்தலிலேயே பொழுதை வீணாக்கு கிறார்கள். தம்மைப் பிரார்த்திப்போருடைய யதார்த்தமான நிலைக்குத்தக அவருக்கு அப்பொழுதைக்கு எது உகந்ததா யிருக்குமோ அதையே கடவுள் கொடுப்பார் என்பது அதன் சரியான அர்த்தமாகும். அன்றி, கேட்டதையெல்லாங் கேட்ட வாறே கொடுத்துவிடுவாரென்றாகாது. உண்மையில் கேட்போர் விரும்பக்கூடியது அவரவர் கர்மபலனையே. குறிப்பிட்டு வேண்டாவிடினுங் கூட அது அவர் பெறுதற்குரியதே. வேண்டு வது - அவர்க்கு அந்நேரம் எது வேண்டுமோ அது.

இன்னார் இனியர் என்ற பாகுபாடின்றி எல்லோருஞ் சிவமாந் தன்மைப் பெருவாழ்வுறுதற் குரியர் என்பது உயர் பெருஞ் சைவ மகிமைகளில் ஒன்று. தனிப்பட்ட ஒரு பிறப்பிலேயே அடைந்துவிடற் குரியதன்று சிவமாந் தன்மை, உயிர்கள் என்றே இருந்தும்கூட நாம் உயிரை அறியோம்.



கடவுளையும் இல்லாத ஒன்றின் வேறாக நாமறியோம். நமது ஆன்மிக அறிவு இங்ஙனம் மிக அற்பமானது. எமது ஆன்மிக ஈடேற்றம் இப்பிறபிற் பெரும்பாலும் புறக்கணிக்கப்படற் பாலதொன்று என்பதும் நாமறிவோம். நிலைமை இதுவாகலின் நாம் ஒவ்வொருவருஞ் சிவமாந் தன்மையுறுமுன் பல பிறப்புகள் எடுக்க வேண்டியவர்கள் எனல் தானே பெறப்படும்.

சைவ தத்துவ சாஸ்திரச் சுருக்கம் : கடவுள் ஒன்றே. உயிர்கள் பல. உயிர்களின் அறிவாற்றல் ஆணவத்தினால் தடையுண்டுள்ளது. உயிர்கள் கன்மங்களைச் செய்து கர்மபலன் களை அநுபவித்து வருதல் மூலம் அத்தடை படிப்படியாக விலக்கப்படும். துன்பம் தவறான செயற்பலன், இன்பம் சரியான செயற்பலன் ஆதல் கர்மநியதி. ஒன்றுந் தவறாமல் சகல உயிர்களும் சிவமாந் தன்மைப் பேரின்ப அநுபவம் பெறுதற்குரியன. அதற்காந்தரம் பெறுதற்குப் பல பிறப்புகள் வேண்டியுள்ளன. மறுபிறப் புண்மைக் கோட்பாடு சைவ தத்துவ சாஸ்திரத்தின் சிறப்பம்சங்களில் ஒன்று. ஆணவ மறைப்பு, உயிர்க்குயிர் தன் மறைப்பாற்றலில் வேறுபடுகின்றது. இந்நிலைமையானது, உயிர்களின் தற்போதைய நிலையில் தம் முட்சமத்துவமின்மை மாத்திரமன்றி அவை சிவமாந்தன்மை யடைதலும் சமகாலத்தில் நிகழ்வதாகாது என்ற உண்மையும் தோற்றுகிறது. இலட்சக்கணக்கான உயிர்கள் இதுவரை சிவமாந் தன்மை எய்தியுள்ளன. இலட்சக்கணக்கானவை வருங்காலத்தில் அந்நிலையை எய்தவுள்ளன.

உயிரினது பரிணாம வளர்ச்சிப்பேறு கடவுள் சந்நிதியிலேயே வாய்க்கிறது. இதில், ஐவேறு கட்டங்கள் அமைகின்றன. உயிரானது தான் கன்மம் இயற்றி ஆணவத் தடையிலிருந்து விடுபடுதற்குச் சாதனமான உடலைப் பெறுதல் அவற்றுளொன்றாகும். இந்தக் கட்டம் இறைவன் செயற்பாட்டு நோக்கிற் படைத்தல் எனப்படும். இதன் மூலம் உயிர்பெறும் உடலானது அதன் பழவினையாகிய பிராரப்தபலனைச் சரிவர

அநுபவிப்பதற்குப் பொருத்தமானதாக அமையும், தனிப்பட்ட ஒரு பிறப்பில் அநுபவித் தொழிக்க வகுக்கப்பட்ட பழவினைப்பகுதி பிராரப்தமாம். ஆகவே, குறித்த பிராரப்தப் பகுதி முடிவுற அநுபவித் தொழிக்கும் வரை குறித்த தேகம் பாதுகாக்கப்பட வேண்டியதாகிறது. இந்தக் கட்டம் காத்தல் எனப்படும். பிராரப்த அநுபவ ஒழிவில் தேகம் அழிக்கப்படும். அது அழித்தல் எனப்படும். உயிரை இயல்பாகவே பற்றியிருந்த ஆணவப் பிடியை பலமிழக்கச் செய்தல் மறைத்தல் எனப்படும். ஆணவத் தடை அடியோடில்லாமல் அகற்றப்படும் நிலையில் உயிர்க்குச் சிவமாந் தன்மைப் பெருவாழ்வு கொடுக்கப்படுதல் அருளல் எனப்படும். உயிர் பரிணாம விருத்தியடைய வைக்கும் மகிமைமிக்க தாகிய கடவுள் சந்நிதி சக்தி எனப்படும். மேற்கண்ட ஐந்து கட்டங்களில் முதல் நான்கையும், அதிஷ்டித்து நடத்தும் சக்தி ஆதி சக்தி அல்லது திரோதான சக்தி எனப்படும். ஐந்தாவது கட்டத்தை மேவி நின்று நடத்துஞ் சக்தி அருட்சக்தி எனப்படும். இவ்விரு சக்திகளும் உண்மையில் ஒன்றே. ஆனால், செயற்படு நிலையில் வைத்தே பெயர் வேறுபாடு கூறப்படுகின்றது.

ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றும் மலங்கள் அல்லது பாசங்கள் எனப்படும்.

நம் வாழ்வின் நடைமுறை இயல்புக்கு ஒத்திசைவாயி ருக்குந் தன்மை சைவத்தின் மற்றோர் மகிமையாகும். நாங்கள் கடவுளில் தங்கியுள்ளோம். அதனால் அவரது விதிமுறைகளுக்கு அமைந்தொழுக வேண்டியவர்கள் என்ற நிலைக்கு என்றும் கட்டுப்பட்டவர்களாக உணர்கிறோம். கடவுள் எம்மை நேசிக்கிறார். நாம் அவரில் அன்பு கொள்கிறோம். அவரை அன்பாதரவாகப் பூசிக்கிறோம். பாடித் துதிக்கிறோம். உலகிலுள்ள சமயங்கள் பலவற்றில் அவற்றின் தத்துவஞானமும் அது சார்ந்தோர் வாழ்க்கையும் ஒத்திசையாது பிரிந்து நிற்கின்றன. ஒவ்வோ ருயிருங் கடவுளாற் புதிதாகப் படைக்கப்பட்டது. பாவஞ் செய்யும் உயிர் அவரால் நித்திய நரகத்துக்கனுப்பப்படுகின்றது. எனப்



போதிக்குஞ் சமயமொன்றுளது. தன் வாழ்வில் ஒரு பாவமாவது செய்யாத உயிரொன்று இவ்வுலகிலிருத்தல் அசம்பாவிதம். அதனால் மனிதன் ஒவ்வொருவனுமே தான் உண்மையில் நரகஞ் செலுத்தப்படும் தண்டனைக்குக் கட்டுப்பட்டவனாக உணர வேண்டியவனாகின்றான். செய்த பாவம் ஒன்றோ பலவோ என்ற நோக்கின்றியே தான் நரகத்துக் கனுப்பப்படும் விதிக்குக் கட்டுப்பட்டவனாக உணர வேண்டியவனாகின்றான். (அதனால் விரக்தியுற்று) அவசியம் என்று தோன்றும் ஒவ்வோர் தருணத்தும் ஒவ்வோர் பாவம் செய்வதைப் பிரியபூர்வமாக ஏற்றுக் கொள்பவனுமாகின்றான். சமயத்தின் ஸ்தாபகரில் நம்பிக்கை வைத்தவர் நரகம் புகார் என அச்சமயஞ் சொல்லுமானால் அச்சமயத்தவரொருவர் தான் நரகம் போக வராதென்னுந் துணிவினால் வெகு சுதந்திரமாகப் பாவஞ் செய்வோ ராவர். அத்தகைய ஒரு சமயஞானம் தார்மிக வாழ்வுக்கு உதவா தாகும். அன்றியும், தானே உயிர்களைப் புதுவதாகப் படைத்துவிட்டு அவற்றிற் பலவற்றை நித்திய நரகமான அல்லல் அநுபவ நிலைக்கு ஆளாக்கி ரமிக்குங் கடவுள் நன்மை புரியுங் கடவுளா யிருக்க முடியாது.

இனி நாம் கடவுட் கொள்கை, உயிர்க் கொள்கை, மலக் கொள்கை என்பனவற்றின் அநுபவங்களைக் கண்டறிய முயல்வோம். இவை கட்புலனாம் பொருள்களன்றாதலின் உருவம் அற்றனவாம். ஞானவான்களுக்குக் கடவுள் குறிக்கப் பட்ட சில வடிவங்களிற் காட்சியளித்துள்ளதாகச் சொல்லப்படு கிறது. அவை, அவர்களுக்குத் தான் தோற்றுவதற்காகக் கடவுள் தன்னருளா லாக்கிக் கொண்ட வடிவங்கள். அவை, அவரது அருள் வடிவங்கள் எனலுமாம். அருள் எங்கும் பிரசன்னமா யுள்ள ஒன்று. ஆனால், சில வேளைகளில் மட்டும் அதுவே பேதங்களை மேற்கொள்கின்றது. அது கடல் நீர் சிலவேளை பனிக்கட்டி யுருவமாதல் போலாம். கடவுள் இயல்பாகவே என்றுமறியும் பொருள் ஆதலால் அது 'சித்' எனப்படுகிறது.

எனப்படுகிறது. தானே 'சித்' ஆதலால் எதையுஞ் சிந்தித் தறிய வேண்டிய தேவை அதற்கில்லை யாகும். நாம் நோக்குவது போல விஷயங்களைப் பகுதி பகுதியாக நோக்கும் நிலையுங் கடவுட் கில்லை. அது முற்றிலும் அன்பு மயம். அதனுடைய இவ்வன்பே எல்லையற்ற ஆன்மாக்கள் பேறடையச் செய்து கொண்டிருக் கின்றது. அக்கடவுளில் மாற்றம் நிகழச் செய்வதற்கு அதை விடப் பலவானான மற்றொன்றில்லாமையால் அது மாற்றமுறா ஒன்று. மாற்ற மற்றதாய்ப் பூரணத்துவ முள்ளதாய் இருத்தலால் அதுவே உயர்ரகமான உள்பொருள். அதனால் அது 'சத்' எனப்படுகிறது. சூரிய ஒளியின்முன் மின்மினி வெளிச்சம் இல்லையாமளவுக் காதல் போலக் கடவுள் முன்னிலையில் உயிர்ப்பிரபை இல்லை யெனும் அளவுக்கு மங்கிப் போகிறது. இந்நோக்கில் உயிர் 'அசத்' எனப்படுகிறது. ஆனால், மலம் அறிவற்றதாயும், உயிர்ப்பற்ற தாயும் இருத்தலின் அதனோடு ஒப்பிடுகையில் உயிர் 'சத்' எனப் படும் நிலையதாக, மலம் 'அசத்' எனும் நிலையதாய் விடுகின்றது. இந்நோக்கில் உயிர் 'சதசத்' ஆம்.

சைவ ஞானத்தின்படிக்குப் பிரபஞ்சம் முழுவதும் சிவன் விதிக் கமைந்தேயுள்ளது. அதன் நிகழ்வு ஒவ்வொன்றும் அவன் விதிக்கிணக்கமாகவே ஆகும். கடவுள் நல்லவர்; அவர் விதிகள் நல்லவை. ஆதலால் உலக நிகழ்வு ஒவ்வொன்றும் நன்றாகவே யிருக்க வேண்டும். உலகிற் சமயங்கள் பலவுள. ஒவ்வோர் சமயமும் பெருந்தொகை மக்களால் அநுசரிக்கப்பட்டு வருகிறது. சிவன் விதியொன்றே அவ்வவர் அவ்வச்சமயத்தினால் நிலை பெற வைத்துள்ள தாதலால் குறிக்கப்பட்ட அவ்வச் சமயமே தற்போதைக்கு அவ்வவனுக்கு நல்லதாகும். அவன் தானாகத் தன் சமயத்தை மாற்றிக் கொளின் அப்புதுச் சமயம் அப்போதைக்கு அவனுக்கு நல்லதாகும். இதனை உணர்ந்துள்ளமையால் சைவஞானம் மதமாற்ற அமைப்பு விதிகளைக் கொண்டிருக்கவில்லை. இது சைவத்தின் மற்றோர் மகிமையாம்.



ஒவ்வோர் சமயமும் ஆத்மிக முன்னேற்றமென்ற ஏணியின் ஒவ்வோர் படியாகவும் அவ்வேணியின் முடிவிலுள் ளதாம் அதியுயர்படி ஆன்மாவைச் சிவன் திருவடியின்பப் பேறடைய வைப்பதாகவும் சைவசமயம் கருதுகிறது.

தன் பரிபக்குவ நிலைக்கேற்பப் புறச்சமயங்களில் நிற்கும் ஒரு ஆன்மா வானது ஸ்மிருதிகள் சொல்லும் வழிகளில் வருந்தியுழன்று வருணாசிரமத் துறைகளை யடைந்து அருந்தவங்களில் முயன்று அறிதற்கரிய கலைகளைக் கற்று வேத, இதிகாச புராணங்களை ஆராய்ந்து படி முறையாக உபநிடத உண்மைகளைத் தேரும் நிலை எய்துகிறது. அதன் பின்பே சைவ சித்தாந்த நாட்டமுற்றுச் சரியை, கிரியை, யோக மார்க்கங்களிற் பயின்று மெய் ஞானத்தைப் பெறுகின்றது. மேல், அவ்வுயிர் சிவன் திருவடி நீழலை அடைந்தின்புறுவதாகும் - எனச் சிவஞான சித்தியார் கூறும்.

இவ்வுலகிலேனும் மற்றெவ்வுலகிலேனும் நல்லதல்லா தது என ஒன்றில்லை. சிவன் விதிப்படி பிரபஞ்சம் இயல்கின்றமை சார்பான சரியான அநுமானம் இது. அதாவது பாவம் என்று சூட்டுதற்கு ஒன்றுமில்லை. இவ்வுலகிலாவது ஏனை உலகிலாவது உயிர்க்கு நற்பலனளித்தற்கு உரியதாகாமையின் விசனம் என்று பொதுவில் அழைக்கப் படுவதாகிய துன்பம் என ஒன்று இங்கெங்கு மில்லை. கடவுள் எல்லாவிதத்திலும் நல்லவர். எல்லாமறிபவர், எல்லா ஆற்றலு முள்ளவர். ஆகையால் எங்காவது துன்பத்துக்கோ விசனத்துக்கோ இடமிருத்தல் பொருந்தாதாகும். நன்மையைத் தீமையாகவும் நமக்கநுகூலமான வாழ்க்கையை விசனமாகவும் நாம் கருதிக் கொள்வது நமது அறியாமையினாலாம். ஆனால், விசனம் அல்லது துக்கத்தின் நிலைப்பிலேயே தளமிட்டெழுந்த சமயங்களுமுள. அவை துக்கத்திலிருந்து தப்புதற்கு வழிகாண முயன்றுகொண்டிருக் கின்றன. அவை துக்க நிவர்த்திக்கு வழிகாணுதலிலேயே மாய்ந்து போகின்றன.

விசனம் என்பது எமக்குத் தீங்கு விளைக்கும் துன்பமாகும். ஆனால், உண்மை நோக்கில் அப்படித் தீங்கு விளைக்குந் துன்பமென்பதற் கொன்றில்லை. மறுபக்க நோக்கில், விசனம் என்பது நமது தவறான கர்மங்களின் விளைவாம். அது நம்மிடத்தில் உண்மை அறிவை விருத்தியாக்கி ஆணவத்தை வலிகெடச் செய்யும் உத்தமமான ஒரு சாதனமாகும். அந்நோக்கில் இது ஆன்மாவுக்கு மிகப் பெறுமதி யுள்ளதும் மிகவும் வரவேற்கத் தக்கதுமான ஒன்றாகும். இரண்டாவதாக, துன்பம் உலகப் பொதுமையாகாது என்ற கருத்து முற்றிலும் உண்மைக்குப் புறம்பானதுமாம். இவ்வுலகிற் பெரும்பான்மையானவர்களுக்கு வாழ்க்கை முழுக்கூறும் பிரீதிகரமானதே. சந்தர்ப்ப வசமாகமட்டுமே துன்பம் தோன்று கிறது. சந்தேகத்துக்கிடமிலா வகையில் ஒருசிலர் ஏனையரிலும் பார்க்கக் கூடுதலாகத் துன்புறுவதும் ஏதோ உள்ளது தான். அச்சிலருள் அதிகமானோர் இதைத் துடியாக உணர்ந் தழுந்தும் வழக்கமும் ஏதோ உள்ளதுதான். அதிர்ஷ்டவசமாக, நமது சைவ ஞானம் அத்தகைய பொய்யான எண்ணப்பாங்கைத் தோற்றாது நாம் எப்போதும் மகிழ்ச்சி பூர்வமாகவே இருக்க வழி வைத்தி ருக்கிறது.

இவ்வகையில் இருளாந்தன்மையும் கீழமுக்குந் தன்மையும் என்பவற்றிலிருந்து வெகுதூரம் வேறுபட்டு, ஒளிமயமானதும் உயிருணர்வை மேலுயர்த்துவதுமாயுள்ள ஒரு சமயம் சைவம், இது அனைவரையும் நல்லவராகவே கருதுகிறது. இதன்படி தவறு செய்பவர்களும் பாவஞ்செய்வோராகார். கடவுள் எல்லாமறிபவரும் எல்லா ஆற்றலு முள்ளவரும் எல்லாரையும் நேசிப்பவருமாய் உள்ளவராதலைப் பொறுத்து அவரது நிர்வாகத்தின் கீழ்ப் பாபம் உலகில் இடம் பெறுதல் அசம்பாவிதமாம். தவறு செய்தல் துன்பகரமான அநுபவத்தை விளைக்க அதன் மூலம் ஆணவந் தேய அதற்குத் தகுமளவு ஆன்மிக முன்னேற்றம் ஏற்படும். இவ்வாற்றால் தவறு செய்தல்



நன்மைக்கேயாம். தவறு செய்தல் என்பது இறைவன் விதிகளுக்கு எதிராக நடத்தல் ஆம். பாவம் என்பது முழுவதும் ஆன்மாவுக்குத் தீங்கு விளைப்பதொன்று. ஆகவே, தவறிழைத் தலைப் பாவம் எனலாகாது தவறிழைப்போனும் நல்லவனே என்க. தவறிழைப்பவன் துன்புறுவோனாக, சரியை அநுசரிப்பவன் இன்புறுவோனாகிறான். அவ்வளவே வித்தியாசம். தவறிழைத்தல் பொதுவில் சரியை அறிந்து அநுசரிக்கும் உளநிலை தோன்றற்கு இன்றியமையா தாகும். குழந்தை ஒன்று 'அ' என்ற அட்சரத்தைச் சரியாக எழுதற்குமுன் பலதடவை பிழையாக எழுதும். ஒருவன் நீச்சல் காரனாதற்குமுன் பலதடவை நீரில் அமிழ்ந்தி முக்குளிப் பான். மற்றச் சமயங்களின் நெறிப்பாடு போய் முடியுமிடத்திற் சைவம் தொடங்குகிறது. சைவசமயத்திற் கால்வைக்கும் ஒருவனுக்குப் பசுவினை ஒப்பு, மலபரிபாகம், சத்திநி பாதம் என்ற ஆன்மிகத் தகுதிகள் வேண்டும். அவன் உளத்தூய்மை நேர்மை களில் ஆட்சியுள்ளவனாதல் வேண்டும். அது அவன் நிழலாம் நிலை வேண்டும். தனது ஆளுமையோடு இணைபிரியா இசைவுற்றவனாம் நிலையில் அவனது ஆணவம் பெரிதும் வலுவற்றதாகும். தன்னில் இயைபுற்றிருக்கும் கடவுள் ஒன்றே உள்பொருள் எனக்கொண்டு ஏனை உயிர்களை அவன் மறக்கி றான். மறத்தல் காரணமாக ஏனை உயிர்களுக்கு உபகா ரமோ அபகாரமோ செய்வது பற்றிய சிந்தனையை அடியோடு கை விட்டு விடுகிறான். மிக முந்திய ஒரு காலத்தி லேயே அவன் பிற ருக்கு அபகாரஞ் செய்தலைக் கைவிட்டிரு ந்திருப்பான். தற் போது உபகாரஞ் செய்தலையுங் கைவிட்டு விடுவான். இது பசுவினை ஒப்புநிலை எனப்படும். உண்மையில், ஏனை உயிர்க ளுக்கு உபகாரஞ் செய்தலை அவன் கைவிட்டு விடுகிறான் என்பதற்கில்லை. அவர்களுக்கு உபகார மாம் வகையில் அவன் செயல் செய்து கொண்டே யிருக்கிறான். ஆனால், அவன் காட்சி யிற் கடவுள் அவ்வுயிர் களுக்கு உபகாரஞ் செய்து கொண்டி ருத்தல் தோன்றுதலால் அவர்களுக்கு உபகாரஞ் செய்வதை அவன் கடவுளைச் சேவிப்பதாகவே கொண்டு விடுகிறான்.

குறித்த பசுவினை யொப்பு, மலபரிபாகம் என்பவை பிரத்தியேகமான ஆன்மிக விளக்கத்தினால் அடையப்படுகின்றன. இது அவனைச் சைவத்திற் பிரவேசித்தற்குத் தகுதியுள்ளவனாக்குகிறது. சமய தீக்ஷை பெறுதல் மூலம் அவன் அதிற் பிரவேசிக்கின்றான். சைவத்தில் இப்பகுதி சரியை எனப்படும். இந்நிலையில் அவன் கோயில்களில் தன் உடலுறுப்புகளாற் சிவப்பணி செய்கின்றான். அத்துடன் சிவனின் உருவ மூர்த்திகளில் ஒன்றைப் பூசித்தலுஞ் செய்கிறான். இச்சரியைச் சேவை அவனுக்குமேலதிக ஆன்மிக விளக்கத்தைக் கொடுத்து அவனை விசேட தீட்சைக்குத் தகுதியுள்ளவன் ஆக்குகிறது. அத்தீட்சை அவனைக் கிரியை மார்க்கத்தில் நிற்க வைக்கிறது. காலகதியில் யோகமார்க்கத்தில் அவன் இயலும் வாய்ப்பு அதனால் ஏற்படுகிறது. இந்நிலைகள் அவனை அளவற்ற ஆன்மப் பிரகாச நிலைக்கு இட்டுச் செல்கின்றன.

இப்பிரகாச நிலையில் அவன் தான் சிவனோடொத் திருப்பதாகிய ஒரு நிலையின் சாயலைக் காண்கின்றான். இந்நிலையிற் சிவனுக்குச் சேவை புரிதல் என்பது, தான் சிவனோடொத்திருப்பதாகக் காணும் உணர்வு நிலைக்கு முரணானதாகும். ஆகையால் அவன் அச்சேவை புரிதலையும் விட்டுவிடுகிறான். இந்நிலை சிவவினை யொப்பு நிலை எனப்படும். ஏனெனில், சிவனுக்குச் சேவை புரிதல் புரியாதொழிதல் இரண்டும் ஒன்றே என அவன் கொள்வதனால். பிறகு அவன் இறுதித் தீக்ஷையாகிய நிர்வாண தீக்ஷையைப் பெறுகின்றான். அதன் மூலம் சைவ நாற்பாதங்களின் முடிவான ஞான பாதத்திற் புகுகின்றான். இங்கு அவன் ஆணவபாசத்திலிருந்து முற்றிலும் விடுபடுதலாகிய முக்தியை யடைகிறான். அடைந்து பூரண சிவப்பிரகாசமாகிய சிவஞானத்தைப் பெற்றுச் சிவனுடன் அத்துவிதமாகின்றான்.

குறித்த நாற்பாதங்களில் ஒவ்வொன்றும் நால்நான்கு உபபாதங்களையுங் கொண்டதாகும். அதனாற் சைவத்திற்



பதினாறு பாதங்கள் படிமுறைக் கிரமத்திலுள்ளன. ஒவ்வொரு பாதமும் தனக்கு மேலான பாதத்துக்கு வழிநடத்தும். பசுவினை ஒப்பு நேர்ந்ததன்மேல் ஒருவன் இப்பதினாறிலும் படிமுறைக் கிரமமாக முன்னேறினால் மட்டுமே அவன் சிவமாந் தன்மை எய்துவோனாவான். இங்ஙனம் அலட்சியம் பண்ண முடியாத வகையிலான ஒழுங்குத் திட்டமொன்றின்றியும் தம்மைச் சேர்ந்தவர்களில் ஆகத்தீர நேர்மையற்றவர்களுக்குங் கூடத் தெய்விகப் பேறு பெற்றுத் தருவோம் என்று கூறுமளவினன்றித் தம்மிடத்திலேயே வந்து சேர்ந்து விடும்படி வேண்டுதல்களும் தூண்டுதல்களும் வற்புறுத்தல்களும் பண்ணிக் கொள்வதிலும் வெகு முனைப்பாயிருக்கும் சமயங்களுக்கு நாம் என்ன பெறுமதி கொடுக்க முடியும்? இச்சமயங்கள் தருவதாகப் பாசாங்கு பண்ணும் தெய்விகப் பேறானது பல்கலைக்கழகங்கள் சிலவற்றால் ஒருசில தங்கநாணயங்களுக்கு வழங்கப்படும் முதுகலை மாணிப் பட்டத்துக்குச் சமமானதாகக் கருதப்படலாம்.

ஆனால், நாம் இன்று சாதாரணத்திற் காணும் சைவம் உண்மைச் சைவம் ஆகாது. இதனை உபாயச் சைவம் எனப் பொருந்தும். இது உரிய தகுதியானன்றிப் பிறப்புரிமை மாத்திரத்தானே மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

என் தந்தை தம்மைச் சைவரென்று கூறிக்கொண்டு வந்திருப்பதால் நான் சைவன். அவர் தந்தை அவ்வாறு கூறிக் கொண்டிருந்ததால் அவர் சைவர். என இங்ஙனம் தலைமுறைக் கிரமத்தில் ஏறிப்போய் முன் எப்போதோ இருந்த ஒரு உண்மைச் சைவரில் முடியுமளவுக்கே இருக்கிறது இன்றைய சைவரின் வம்சாவழிப் பட்டியல். பிறப்புரிமையினால் மட்டும் மன்னர்களாக இன்று காணப்படுபவர்கள் மன்னர்க்குரிய மகிமைகள் அனைத்துடனும் விளங்குவது போல நாமும் உண்மைச் சைவத்துக்குரிய சகல மகிமைகளும் நமக்குள்வாகக் கருத்தளவிற் கொண்டு வாழ்கின்றோம். உரிய தகுதிகள் இல்லாதேயும், நாம் நம்மைச் சைவர் என்று சொல்லும் நிலைக்கு

அதிகமாகச் சொல்ல முடியாத அளவுக்குத் தன்னைக் குருவாகக் காட்டும் குருத்துவத் தகுதி ஏதுமில்லாத குருவிடமே நாம் தீட்சை பெறுகிறோம். தீட்சையின் சார்பாகச் சைவ நாற்பாதங்களில் ஏதாவதொன்றிற் சேர்ந்தியல்கிறோம். வாழ்வு முடிவில், உரிய தகுதி பெற்ற ஆன்மாவைச் சிவலோகஞ் சேர்விக்க வல்லதென்றுள்ள பிரேதக் கிரியையும் செய்யப் பெறுகிறோம். அந்தியேட்டிவரையிலான மரணக் கிரியைகளின் பின் இடம் பெறும் வருட சிரார்த்தம் முதலானவை இறந்து போன ஆத்மாக்களைத் தெய்வங்களாகக் கருதி இயற்றும் பூசைகளாகும். அவற்றையுமே பெறுகிறோம்.

உமது தகுதிக்குப் பொருந்தாததாகிய ஒரு சமயத்தை நீர் அநுட்டிக்க வேண்டுவதேன்? என்ற கேள்வி இங்கெழலாம். நான் சைவத்தை அநுட்டிக்குந் தகுதியற்றேனாயினும் எனது பிறப்புரிமை உபாயச் சைவம் எனுமளவுக்கு அதை அநுட்டிக்குந் தகுதியை வழங்குகின்றது. அதனால் நான் அதிக அளவு நன்மை அடைகின்றேன். விபூதி தரித்தல், பஞ்சாக்ஷசரத் தியானம், வழிபாடு, திருமுறைப் பாராயணம் என்பவற்றால், சந்தேகத்துக் கிடமில்லாமலே நான் லாபமடைகின்றேன். இது, உரிய காலத்தில், பெரும்பாலும் பல பிறப்புகள் தாண்டி, என்னை உண்மைச் சைவத்திற் செலுத்தும்.

**பரமுத்தி பற்றிய ஒரு குறிப்பு :**

*பரமுத்தி பெறுவோர் இருவேறுவகையினராவர். (அ) ஆணவத்திலிருந்து விடுபடுஞ் சமகாலத்திற் பிராரப்தம் அநுபவித்து முடித்துள்ளோர். (ஆ) அதே காலத்திற் பிராரப்த அநுபவம் நிறைவுறப் பெறாதோர். முன்னையவர் விஷயத்தில், பிராரப்தம் முழுவதாக ஒழிந்து போனமையால், உடனடியாகவே உடல் அழிய வேண்டியதாக, சமகாலத்தில் உயிர் மும்மலங்களிலுமிருந்து விடுதலை பெறுகின்றது. இரண்டாம் வகையினர் விஷயத்தில், பிராரப்தமும், ஆணவ கன்மமலங்களும் முற்றாக ஒழியாது எழுச்சியுள்ளன. அவர்கள்*



*ஆணவத்திலிருந்து விடுதலையுற்ற பின்னரும் உடல் வாழ்ந்திருக்கு மளவில் அவர்கள் ஜீவன் முக்தர் எனப்படுவர். இந்நிலையில், எச்சசொச்சமாயிருக்கும் பிராரப்தம் உயிரிடத்தில் தன் தாக்கத்தை ஏற்படுத்துஞ் சார்புள்ளதாயிருக்கும். ஆனால், உயிரின் செயற்படுவிருப்பைத் தொடக்கும் ஆணவம் அங்கில்லாமையால், அப்பிராரப்தத் தாக்கம் உயிரிடத்திற் புதிதான பிரதி இயக்கத்தை ஆக்கும் வலுவற்றொழியும். ஆகையால், அத்தாக்கம் உயிரின் முன்னைய பழக்க வாசனையைப் பயன்படுத்த முயலும். இது மலநிவிர்த்தி பெற்ற ஆன்மா தன்னைச் சிவனின் வேறாகக் கருத வைக்கும் ஒரு பழக்கமுமாம். இதற் காளாமவர் பஞ்சாட்சரத் தியானத்தின் மூலம் இக்கருத்தை இலகுவில் திருத்தியமைக்கக் கூடியவராவர். அவ்வழியே அவர் வாசனாமலத்திலிருந்தும் முற்றாக விடுபட்டொழிவர். குயவனொருவன் தன் தொழிற்குத் துணைக் காரணமாயிருந்த சக்கரச் சுழற்சியை நிறுத்திய பின்னும் சக்கரம் சில விநாடிகள் சுழலும் நிகழ்ச்சியோ டொப்பிட்டு இவ்வாசனா மல நிகழ்ச்சி விளக்கப்படும். நிறுத்தப்பட்ட பின்னும் தானாக நிகழுஞ் சக்கரச் சுழற்சியானது குடம் அங்கில்லா வரையில் எதுவுஞ் செய்தற்கில்லாமை போன்று, ஜீவன் முத்தனில் ஆணவம் இல்லாத வரையில் வாசனா மலமும் எதுவுஞ் செய்தற்கிலதாம். ஆனால், விழிப்புணர்வற்ற நிலையில் இருக்கும் மூடர் சிலர் அவ்வாசனாமலத் தாக்கமே சார்பாகக் காம இச்சை நுகர்வுக்கு ஊக்கங் கொடுத்து மாய்பவருமாவர். சீவன் முத்த நிலை யுறும் உயிர்தான் சமய தீட்சை பெற்றுச் சைவமாம் நிலைக்கு வெகு முன்பாகவே தகாத காம உறவைத் தவிர்ந்திருந்த ஒன்று. இந்நிலை, குறித்த வாசனாமலம் தோன்றும் பிறப்புக்கு இலட்சக்கணக்கில் முந்திய ஒரு பிறப்பில் நிகழ்ந்திருக்கும் என்பதுங் காண்க. மேலும் இத்தொடர்பில் குறிப்பிடத் தக்க முக்கிய அம்சமொன்று வருமாறு :*

*இப்பரமுக்தர்கள் மற்றை உயிர்களில் மட்டற்ற அன்புள்ளோராவர். தமது சிவபூசைக்கு மலர் தொகுக்கும் போதும் தாமாக*

*உதிர்ந்த மலர்களைப் பொறுக்கி எடுப்பதன்றிப் பூஞ்செடி வருந்து மென்றஞ்சி அதிலிருந்து நேரடியாக ஆய்ந்தெடுக்க மாட்டார்கள். இது அவர்களின் மட்டற்ற அன்பு நிலைக்கு அளவு கோலாகும்.*





## அத்தியாயம் இரண்டு
## சைவப் புனித நூல்கள்

வேதங்களுஞ் சைவாகமங்களுஞ் சிவனால் அருளப் பட்டனவாகச் சைவர் கொள்வர். இவைகள் கொண்டிருக்கும் உண்மைகள் மனித அறிவுக் கெட்டாதவை. ஆதலால், இவை சிவனிடமிருந்து தோன்றியன என்றே ஆம். திருமூலர், மாணிக்கவாசகர், தேவார முதலிகள், அருள்நந்தி சிவசாரியர் என்ற சைவ ஞானிகள் இவை சிவனிடமிருந்து தோன்றியனவாக அருளிச்செய்துள்ளனர்.

மனம் வாக்குக் கடந்த உண்மைகளைக் கிரகிக்கக் கூடிய அதி தூய்மை வாய்ந்த உயிர் வருக்கமாகிய விஞ்ஞான கலர் என்போருக்குச் சிவன் இவை விளங்க அருள் செய்தார் எனச் சொல்லப்படுகின்றது. இவ்விஞ்ஞாகலர்கள் பிரளயாகலர் வர்க்கத்து உயிர்களுக்கு இவற்றைப் போதித்தனர். அவர்களிடமி ருந்து நிர்வாண தீட்சைத் தகுதியுற்ற சகலவர்க்க உயிர்களுக்கு இவை பரம்புவனவாயின. ஒவ்வோர் சமயத்துக்கும் அவ்வச் சமயக் கடவுளிடமிருந்தோ ஞானியிடமிருந்தோ தோன்றியதாகச் சொல்லப்படுஞ் சொந்த வேதமுண்டு. கிறிஸ்தவரின் வேதம் பைபிள். முஸ்லீம்களின் வேதம் கோரான். ஆதலால் சைவத்துக்கு உயர்தர உத்தரவாதமுள்ள பிரமாண நூல்களாக உள்ள வேத சிவாகமங்களை ஏற்றுக் கொள்ள மறுக்கும் எவருஞ் சைவர் ஆகக் கருதப்பட மாட்டார்.

வேதங்கள் பாரத நாட்டின் மற்றும்பல வைதிக சமயங்கட்கும் உத்தரவாதமுள்ள பிரமாண நூல்களாயிருப்ப தாலும் எல்லோரும் அவற்றைக் கற்கும் உரிமை இருத்தலாலும் அவை இன்றும் நிலைத்துள்ளன. அத்துடன் ஐரோப்பா, அமெரிக்கா என்ற மேலை நாடுகளுக்கும் எட்டியுள்ளன. ஆனால், சிவாகமங்கள் சைவர்களால் மட்டும் புனித சாஸ்திர நூல்களாகக் கொள்ளப்படுதலினாலும் இறுதித் தீட்சையாகிய

நிர்வாண தீட்சையுடையோரால் மட்டும் அறியத் தக்கனவா யிருப்பதனாலும் பிரசித்திக்காமல் அதிர்ஷ்டக் குறைவுள்ளன வாயின. கடந்த இரு நூற்றாண்டுகளுக்குள் அவற்றிற் பல மறைந் தும் போயின. இருநூறாண்டுகளுக்கு முன் வாழ்ந்திருந்த சிவஞான முனிவர் தமது வியாக்கியானங்களில் சிவாகமங்கள் பலவற்றைத் தொடர்பு காட்டியுள்ளார். ஆனால், அவற்றில் எதுவும் அப்போது இழக்கப்பட்டிருப்பதாகக் குறிப்பிட்டிலர். கடந்த ஒரு நூற்றாண்டில் ஆங்கிலக்கல்வி புத்திமான்களில் திறமை மிக்கார் பலரைக் கவர்ந்திழுத்திருக்கிறது. அது ஒருவரையுஞ் சிவாகமங் கற்க விடவில்லை. அதனால், அவைகள் ஒன்றில் தூக்கி வீசப்பட்டிருக்கலாம் அல்லது கறையானுக் கிரையாகப் போயிருக்கலாம்.

அதிர்ஷ்ட வசமாக, எங்களுக்காக, சிவாகமங்களின் கிரியா பாதம் எங்கள் பூசகர் கைகளிற் பாதுகாப்போடிருக்கிறது. ஞானபாதம் சைவ ஞானிகளால் எமக்குத் தமிழில் வழங்கப்பட் டுள்ளது. இரண்டாயிரம் வருடங்களுக்கு[1] முன் வாழ்ந்தவராகக் காணப்படும் திருமூலர், சிவாகம ஞானபாதப் பகுதிகள் சிலவற்றை எங்களுக்காக, தமது திருமந்திர நூலில் தந்துள்ளார். இரௌரவாகமத்தின் ஒரு பகுதியும் அதன் சாரமுமா யுள்ள சிவஞான போதம் சுமார் பதினைந்து நூற்றாண்டுகளின்[2] முன் பரமாசாரியாரால், மாணிக்கவாசகருக்குப் போதிக்கப்பட்டிருக் கிறது. மாணிக்கவாசகர் சிவஞான போத உண்மைகள் சிலவற்றைத் தமது திருவாசகத்தில் மீட்டு வைத்துள்ளார். பரஞ்சோதிமுனிவர் மெய்கண்ட தேவருக்குச் சிவஞான போதத் தை உபதேசித்து அதைத் தமிழில் மொழிபெயர்க்குமாறு கேட்டுள்ளார். குருவின் ஆணைக்கமைந்து மெய்கண்ட தேவர் அதைத் தமிழில் மொழி பெயர்த்து வேண்டுங் குறிப்புகளுஞ் சேர்த்திருக்கின்றார். இவ்வகையிற் சிவாகம சாரமாகிய சிவஞான

1. இத்திகதிகள் நம்பத்தக்கவையல்ல.
2. இத்திகதிகள் சரியானவையல்ல.



போதம் எமக்குத் தமிழிற் கிடைக்கும் வாய்ப்புளதாயிற்று. மெய்கண்ட தேவர் அதைத் தமது சீடர் அருணந்தி சிவாசாரி யாருக் குபதேசித்து அச்சிவஞான போதத்தை விரிவான விளக்கத்தோடு கூடிய ஒரு ஆகம நூலாக விரித்தமைக்குமாறு பணித்துள்ளார். ஆகையால், அருணந்தி சிவாசாரியார் ஆகமங் களிலிருந்து அதிகமான பகுதிகளைச் சேர்த்து அதனை விரித்தமைத்துச் சிவஞான சித்தியார் என்ற பெயரில் ஒரு சாஸ்திரமாக்கியிருக்கிறார். இந்நூலாசிரியர்கள் இந்நூலிற் காணும் உண்மைகள் சிலவற்றுக்கு நேரொத்த உண்மைகளைச் சிவாகமங் களிலிருந் தெடுத்துக் காட்டியுள்ளனர். அருணந்தி சிவாசாரியார் இருபா இருபஃது என்னும் மற்றொரு நூல் இயற்றிச் சிவஞான சித்தியார் பொருளை நிறைவு செய்திருக்கிறார். இவ்வாற்றால், எங்கள் சிவாகமங்கள் மெய்கண்டாராலும் அருணந்தியாராலும் தமிழிற் பேணப்பட்டிருக்கின்றன. சிவாகம உண்மைகள் தேவாரங்களிலும் பயின்றிருக்கக் காணப்படும். அருணந்தியாரின் சீடராகிய உமாபதிசிவம் சிவாகம உண்மைகளை உட்கொண்ட சிவப்பிரகாசம், திருவருட்பயன் முதலிய எட்டுச் சைவ சித்தாந்த சாஸ்திர நூல்களை இயற்றியிருப்பதாகச் சொல்லப்படுகிறது. மெய்கண்டாருக்கு முந்திய மூன்று ஞானிகள் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், உண்மைவிளக்கம் என்ற சித்தாந்த சாஸ்திர நூல்களை இயற்றியிருக்கிறார்கள். இப்பதினான்கு நூல்களும் இப்பொழுது மெய்கண்ட சாஸ்திரங்கள் என்ற பெயரில் வழங்குகின்றன. இவற்றுடன் சிவதருமோத்தரம், சதாசிவ ரூபம் என்னும் நூல்களுஞ் சேர்த்துக் கொள்ளப்படத் தக்கனவாம். இவற்றுள் முன்னையது சர்வோக்த ஆகமத்திலிருந்து பெறப்பட டதும் மற்றது வாதுளாகமத்தில் ஒரு பகுதியின் மொழிபெயர்ப் புமாம்.

வேதங்களும் சிவாகமங்களும், சாஸ்திர உண்மைகளை வெளிப்படுத்தற்கு அகில இந்தியப் பொதுமொழியாகச் சிறப்

புற்றுள்ள சமஸ்கிருதத்திலுள்ளன.[3]

சமஸ்கிருதம் அகில இந்தியாவுக்கும் பொதுமொழியாயிருப்பது போல வேதங்கள் இந்தியாவின் சமயங்கள் அனைத்துக்கும் பொதுவாக உள்ளன. சைவர், வைஷ்ணவர், சாக்தர் அனைவருக்குமே அவை வேதங்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. தத்தமக்குச் சிறப்பாக உள்ள ஆகமங்கள் தெரிவிக்கும் ஞான உண்மைகளுக்குப் பொருந்துமாறு அவர்கள் வேதத்துக்கு அர்த்தம் பண்ணிக் கொள்கின்றனர். வேதங்கள் கர்மகாண்டம், உபாசனா காண்டம், ஞான காண்டம் என மூன்றுவித உட்பிரிவுகள் கொண்டுள்ளன. அம்மூன்றும் முறையே யாகக்கிரியை, தியான வழிபாடு, மெய்ப்பொருளுண்மை விளக்கம் என்றாகும். அவர்கள் கிரியைக்கும் வழிபாட்டுக்கும் மூர்த்தமாயிருப்பது அக்னி - சிவாக்கினி.

சிவாகமங்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு பகுதிகளைக் கொண்டுள்ளன. கிரியை பற்றிய விளக்கத்தில் ஆகமத்துக் காகமம் சிறிது வேறுபாடுண்டென்பர் சிவஞான முனிவர்.[4] அவ்வேறுபாடு, அவ்வவ்வாகமங்கள் தோன்றிய கற்ப (கால) வேறுபாட்டுக்கும் அவ்வக் கற்பக்காலத்து உயிர்களின் பக்குவ வேறுபாட்டுக்கும் ஏற்ப இடம் பெற்றுள்ள தென்பர். ஆனால், ஞான பாத விஷயத்தில் அவற்றிடை வேறுபாடின்று. மெய்ப்பொருளின் நிலை, சூழ்நிலை யேதுக்களில் தங்காது சுதந்திரமாயுள்ளதாதலின் அது அங்ஙனமாயிற்று. ஆகமங்களில் அங்குமிங்குமாகத் தொடர்புதோன்றாவகையிற் கிடக்குங் கிரியை முறைகள் நேரடி உபயோகத்துக்கும் தொடர்பு விளங்குதற்கும் ஏற்ற ஒரு முறையிற் பத்ததிகளில் தொடர்புறுத்தி அமைக்கப்பட்டுள்ளன. சிவாகமங்களின் சரியை கிரியைப் பகுதிகள் சிதைவுறாவண்ணம் இப்பத்ததிகளிற் பேணப்பட் டுள்ளன.

3. தமிழ் எங்கள் மொழியாமளவுக்குச் சமஸ்கிருதமும் எங்கள் மொழியே. சமஸ்கிருதம் என்றாயினும் பேச்சுமொழியாயிருந்த தில்லை எனல் குறிப்பிடத் தகும். வட இந்தியப் பேச்சுமொழி பிராகிருதம்.

4. சிவஞானபாடியம் பக். 9. பால்வனம் பிள்ளை பதிப்பு.



மாணிக்கவாசக சுவாமிகளின் திருவாசகம் சிவஸ்துதியும் தத்துவ ஞான விளக்கமும் இணைந்த நிலையிலுள்ளது. இது 658 திருப்பாடல்களைக் கொண்ட ஐம்பத்தொரு பதிகங்களாகவுள்ளது. ஒவ்வொரு பதிகமும் உள்ளடக்கும் ஞானவிளக்க அம்சம் திருவுளக்கிடை என்ற பெயரில் பதிக முகப்புத் தோறும் பதிக்கப்பட்டுள்ளது. எனினும், உயர்ஞான விளக்கம் நமக்கு வழங்கபடாதிருக்குங் குறைபாட்டினால் நாம் அப்பதிகங்களின் உள்ளடக்கமாயிருக்கும் மெய்ஞ்ஞான உண்மைகளைக் கண்டறிய இயலாதவர்களாயிருக்கிறோம். ஆகக் கூடுதலாக நாம் விளங்கத் தக்கதாயிருப்பது அத்திருப்பாடல்களின் முகப்புத் தோற்றமாயுள்ள சொற்பொருள் மட்டுமே. அது தானும் எங்களுக்கு முடிவற்ற நன்மை தரும் பெறுமதி வாய்ந்ததாம்.

திருவாசகத் திருப்பாடல்கள் சிவன் கருணையை கற்போருள்ளுறுத்தி உரோமஞ் சிலிர்க்கச் செய்வன. உரைப்போர் கேட்போர் எனும் இருதிறத்தாரையும் உருக்கும் பான்மையன. 'திருவாசகத்துக் குருகாதார் ஒருவாசகத்துக்கு முருகார்' - என்பதோர் பழமொழியுமுண்டு. தீவிர கத்தோலிக்க பக்தனான மாணவனொருவன், திருவாசகம் ஒருகாலோதக் கேட்க நேர்ந்ததிலிருந்து தன்னைச் சைவத்திலியைத்து மதமாற்றம் பண்ணிக் கொண்டதுண்டு.[5] 'ஒக்ஸ் போட்' பல்கலைக்கழகஞ் சார்ந்த கலாநிதி ஜி.யு.போப் என்பவர் தாம் ஒரு கிறிஸ்தவரா யிருந்தும் இத்திருவாசக நூலின் உயர்ரகமான பெறுமதியை யுணர்ந்து முழுவதையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக் கிறார். இந்நூலே சிவன் திருவுருவாகக் கருதப்படுகின்றது. சைவரிற் பெரும் பாலோர் இந்நூலை நடராஜ மூர்த்தியோடொத் ததாகக் கண்டு இதற்குப் பூசை புரிந்து வருகிறார்கள். சைவர் களுக்கு இந்நூல் பெருமகிமைக்குரிய உடைமையாக இருந்து வருகிறது. திருவாசகத்துடன் பூமியில் வாழக்கிடைக்கும் வாழ்வின்பம்

5. அவர் இப்பொழுது இலங்கை அரச சேவையில் உயர்பதவி யொன்றில் உள்ளார்.

அஃதில்லாமற் சுவர்க்கத்திற் பெறும் இன்பத்தைவிட அதிக அளவுக்கு மேலானதாம்.

கால ஒழுங்கில் திருவாசகத்தை அடுத்துள்ளன தேவாரங்கள். இவை அதைவிடத் தொகையிற் பல மடங்கானவை. அப்பர், சம்பந்தர், சுந்தரர் எனும் மூவராலும் அருளிச் செய்யப் பெற்றவை. அவற்றுள் தெரிந்தெடுக்கப்பட்ட இருபத்தைந்து பதிகங்களின் உள்ளுறை யாகிய ஞானப்பொருளைக் கிரகித்து அவற்றையே பதிகங்களுக்குத் தலையங்கங்ககளாக இட்டுப் பெயரறியப்படாத முனிவர் ஒருவர் அகத்தியர் தேவாரத் திரட்டு என்ற பெயரிற் படைத்துள்ளார். மற்றும் பதிகங்களும் தனித்தனி குறிப்பிடக்கூடிய ஞானப் பொரு ளம்சங்களோடுள்ளனவோ என ஆய்ந்து துணியும் நிலையில் நாம் இல்லை. பதிகங்களின் பொருள் முகப்புத் தோற்றமட்டில் நமக்குப் புலப்படும் இவைகளும் நமக்குப் பெறுமதி மிக்கனவாம். ஆனால், பதிகங்களின் உள்ளடக்கமான தத்துவஞானம் பொருள் முகப்புத் தோற்றமளிக்கும் தலையங்கங்கள் என்பவற்றைவிட அவை களிற் பதிந்திருக்குந் திருவருள் விலாசம் நமக்கு அளவற்ற பெறுமதி வாய்ந்த தாகும். கற்றோராயினும் கல்லாதோராயினும் பக்தியில் ஈடுபட்டு அப்பதிகங்களை ஓதுவோர் ஒவ்வொரு வருக்கும் இது கிடைக்கக்கூடியதாம். நோயாளி ஒருவன் தனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் மருந்தின் குணநலன் களையும் அதை ஆக்குதற் கமைந்த சரக்குகளையும் பற்றி ஒன்று மறியானா யினும் அம்மருந்தாற் பூரண நன்மையுறுதல் தவறாமை போல, தேவாரப் பதிகங்களின் ஞான உள்ளுறை, முகப்புப் பொருள் என்பவற் றைப் பற்றி ஒன்றுமே அறியா தோரும் பக்திபூர்வமாக அவற்றை ஓதுங்காற் பயனுறுதல் தவறாதாகும். பட்டணத்தார், தாயுமானவர் முதலான மற்றுஞ் சைவஞானிகளின் பாடல்களு முள. அவையுந் தெய்விகப் புனிதப் பாடல்களே. இவற்றைத் தொடர்ந்து இடம்பெறுவது புராணம். அது எவ்வகையிலாயினும் உத்தரவாதமுள்ள பிரமாண நூலாவதில்லை. இப்புராணங்கள்



பௌராணிகப் போர்வை காவியப் போர்வை எனும் இருவகைப் போர்வை போர்த்துக் கொண்டுள்ளமையால் அவற்றை உரித்துவிட்டே பொருளுண்மையைக் காண வேண்டியாகும். புராணங்களின் பொருளை அறிவுடை யோர் ஆராய்ந்து கண்டு கொள்ளல் வேண்டுமெனக் கந்தபுராண ஆசிரியர் கூறுவர். புராணங்களின் உண்மைப் பொருள் அவற்றின் முகப்புத் தோற்றமளவில் பெறப்பட்டாகாது என்பதே அவர் கூற்றின் தாற்பரியமாம். ஸ்ரீ ல ஸ்ரீ ஆறுமுக நாவலர் புராணங்கள் பற்றிக் குறிப்பிட்டிருப்பதாவது :-

கந்தபுராணத்தில் விவரிக்கப்படுந் திருமணங்கள் மூன்றில் ஒன்றேனும் என்றேனும் குறித்த விவரணப்படி நிகழ்ந்த நிகழ்ச்சியாகா. பிரபஞ்ச சிருஷ்டி நேருங்காலத்தில் பரமசிவத்திட மிருந்து சக்தி வியாபிக்கும் நிலையே அவற்றில் அறிகுறி வகையால் உணர்த்தப்பட்டுள்ளது. அவ்வுணர்வின்றி இப்பகு திக்கு இலக்கிய ஆய்வு மோடியில் உரை நிகழ்த்து வோருங் கேட்போரும் நரகத்தில் வீழ்வர் - என்பதாகும்.

சாஸ்திர உண்மைகளுக்கு ஒத்துவராத புராணக் கதைகள் ஒன்றில் தத்துவஞான அடிப்படையில் விளக்கப்பட வேண்டும் அல்லது அலுமாரி அடித் தட்டிலிட்டுப் பூட்டப்பட வேண்டும்.

தேங்காய் தின்ன விரும்புவோன் முதலில் அதன் புறத்திலுள்ள மட்டைகளை உரித்துக் கடினமான அதன் ஓட்டை உடைக்க வேண்டும். புற மட்டையே உண்ணும் பகுதியென எண்ணிக் கடித்தலாகாது.

புராணம் எனத் தவறாகப் பேரிடப்பட்ட நூல்களுமுள. குப்பை அமுக்கும் சப்பியும் போல அருவருத்து விலக்கத் தகும் பயனற்ற பகுதிகள் அவற்றிலிருக்கும். அவை நம்முடைய னவாதற்கு அருகதை யற்றவையாம்.



## அத்தியாயம் மூன்று

# விபூதி

சைவசமயம் தன்னவர்களுக்கு வழங்கியுள்ள மிக உயர்ந்ததும் மிக எளிமையானதும் ஆன பொதுக் கொடை திருநீறு. சமஸ்கிருதத்தில் இதன் பெயர் விபூதி.[1] இதன் பொருள் விலைமதிப்பற்ற செல்வம் அல்லது அமாநுஷிக ஆற்றல் என்பதாம். இறைவன் கருணையாகிய பராசக்தியின் வடிவம் இதுவாதலின் இது நமக்கு உயர் பெருங் கொடையாகவுள்ளது. எங்கும் எப்போதும் ஒன்றுங் கொடுக்காமலே இலகுவிற் பெறக்கூடிய தாயிருத்தலின் இது எளிமையானது. சைவசமயத் தவர் என்றுள்ள ஒவ்வொருவரும் தராதர வேறுபாடின்றித் தம் உடைமையாகக் கொள்ளுதற்குரிய தாகலின் இது அனைவருக் கும் பொதுவுடைமையாயுள்ளது. இதனை ஏற்று அணிந்து கொள் ளாத எவருஞ் சைவர் ஆகார்.

அகஸ்தியர் தேவாரத் திரட்டு என்ற நூல் இருபத்தைந்து தேவாரப் பதிகங்களைக் கொண்டுள்ளது. ஒவ்வோர் பதிகத்தி னதும் கருத்துப் பொருள் பெயரறியப்படாத முனிவர் ஒருவர் இயற்றிய பாடலொன்றிற் கொடுக்கப்பட்டுள்ளது. திருஞான சம்பந்தரின் திருநீற்றுப் பதிகமும் இவ்விருபத்தைந்தில் ஒன்று. இதன் கருத்துப் பொருளாக அவர் குறிப்பிடுவது, 'நீற்றுப் பதிகம் நிகழ்த்துங்காலை மாற்றுப் பரையின் வரலாறாகும்' என் பதாகும். மாற்றுப்பரை - பராசக்தி. இப்பதிகத்திலிருந்து திருநீறு பராசக்தியின் வரலாறு என்பதைக் கண்டறிய ரிஷி ஒருவர் வேண்டியதில்லை எனல் குறிப்பிடத்தகும்.

சம்பந்தர் இப்பதிகத்தில் திருநீற்றின் சிறப்பியல்புகளாக ஐம்பத்து நான்கைக் குறிப்பிடுகிறார். அவற்றில் அதிகப்பாங் கானவை சிவசக்தியின் குணங்களாகும். சம்பந்தர் திருநீற்றை மந்திரமாக இனங்கண்டுள்ளார். சித்தியார் 1 - 58 இற் கூறப்பட்

1. திருநீற்றின் மறுபெயர்கள் :- பசிதம் = ஒளியைத் தருவது, அஃதாவதுஞானத்தைத் தருவது. பஸ்மம் = பாவங்களைத் தடுப்பது. க்ஷரம் = தடைகளை அறுப்பது. ரட்சை = காப்பது.



டுள்ளதற்கிணங்க மந்திரத்தைச் சிவசத்தி தானே பிரேரித்துத் தானே அதிட்டித்துக் கொண்டிருக்கிறது. அதாவது அதனைத் தனது பூரண கட்டுப்பாட்டில் அல்லது செல்வாக்கில் இயங்க வைத்திருக்கின்றது என அறியப்படும். 'முத்தி தருவது நீறு', 'போதந் தருவது நீறு' என்பனவும் நோக்கத்தகும். முத்தி - வீடு பேறு; போதம் - ஞானம். இரண்டுஞ் சிவசத்தி ஒன்றானன்றி வழங்கப்படுமாறில்லை.

ஆகையால், நாம் திருநீறணிகிறோம் எனில் சிவனரு ளாகிய சிவசக்தியை அணிகிறோம் என்பதே அதன் தாற்பரிய மாகும். எங்கள் நெற்றி முதலாம் உறுப்புகளில் நாங்கள் திருநீறு அணிதலால் அவ்வுறுப்புகள் சிவசத்தி உறையும் பரிசுத்த நிலையங்களாகின்றன. திருநீற்றை அணிகையில் 'சிவ சிவ' என்ற மகா மந்திரத்தை உச்சரிக்கிறோம். இம்மந்திரம் திருநீற்றிற் பிரசன்னமாம்படி சிவசக்தியை வரவழைக்கும் ஆவாஹன மந்திரம் ஆகிறது. இங்கு சத்தி பிரசன்னமாதல் என்பது தயிரில் நெய் போல நீற்றில் விளங்கித் தோன்றுதல் என்ற தாம். நாம் விபூதி அணியும் இடங்களில் நெற்றி நமது சிந்தனைகளுக் கிடம்; நெஞ்சு உணர்வுகளுக்கிடம். நாங்கள் சரியான முறையில் விபூதி அணிதலால் நமது சிந்தனைகளும் உணர்வுகளும் சரியான வழியில் எழுமாறு தூண்டப்படுகின்றன.

சைவானுஷ்டான விதிப்படி திருநீறணிதல் அதில் சிவசக்தி பிரசன்னமாதற்குதவுகின்றது. அத்துடன், திருநீறே சிவசக்தி என்ற ஒருமைப்பாட்டை உறுதி செய்யும் நடைமுறை யுமாகின்றது. சைவானுஷ்டான நடைமுறை அமைவில் திருநீறு சம்பந்தமான அம்சங்கள் ஆவன :

> கையிற்கொண்ட திருநீற்றைப் பார்த்தவண்ணம் அதன் மேற் செறியுமாறு சங்கிதா மந்திரம் பதினொன்றும் உச் சரிக்கப்படுதலால் அம்மந்திரங்களிற் செறிவாயுள்ள மந்திர சக்தி திருநீற்றில், விசேடமாகப் பிரசன்னமாதல்.

2. மந்திர பாவனைகளாற் புனிதமாக்கப்பட்ட நீரை ஒரு மந்திர உச்சாரணத்துடன் திருநீற்றில் தெளித்து மற்றொரு மந்திரோச்சாரணத்துடன் குழைத்தல்.

3. குழைக்கப்பட்ட விபூதி, உச்சி, நெற்றி, நெஞ்சு, தொப் பூழ்[2] என்பவற்றிலும் மற்றுமுள்ள உடற்பகுதிகளிலும் பிரம மந்திர உச்சாரணத்துடன் அணியப்படுதல். இப்பிரமமந்திரம் ஐந்திலும் பிரச்சன்னமா யிருக்குஞ் சிவ சக்தி முறையே சிவானந்தம் வழங்கல், ஆணவ மலத்தை அமுக்கல், பிறப்பொழிவில் இளைப்பாற வைத்தல், காத்தல், படைத்தல்[3] நிலைகளை நிர்வகித் திருப்பதாகும்.

4. குழைத்த விபூதியின் எச்ச சொச்சமாகக் கையில் ஒட்டியிருக்கக் கூடியதை மேலும் நீர்விட்டுக் கரைத்துப் பிரமமந்திரங்கள் ஐந்தையும் அதில் அழுத்திச் சிரசில் தெளித்தல்.

இவ்வனுட்டான விதி முறையில் விபூதி முக்குறியாக அணியப்படுகிறது. இம்மூன்றும் முறையே கிரியா சக்தி, இச்சாசக்தி, ஞானசக்திகளைக் குறிக்கும். இச்சக்திகள் பராசக்தியின் அம்சங்கள் (காலாக்னிருத்திர உபநிஷத். 7 - 9) ஆகையால், திருநீற்றை நாம் சரியான முறையில் சரியான உட்பொருள் விளக்க உணர்வுடன் அநுட்டான விதப்பிரகாரம் அணிவோ மானால் நமக்குள்ள இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி மூன்றும் தூய்மையுற்று உயர்நிலை பெறும். தவறான விருப்பங்கள் அல்லது எண்ணங்கள் நம்மில் தோன்றாமல் தடுக்கப்படும். பராசக்தி முன்னிலையில் நாமுளோம் என்ற நமது பிரக்ஞை யானது பெருந்தன்மையான தூய உணர்வுகளுக்கு மட்டுமே இடங்கொடுப்பதாயிருக்கும். நமது அன்னை உமாதேவி நம்மிற்

2. இந்நான்கிடமும் ஆன்ம மர்மஸ்தானங்கள். அதாவது உயிர்நிலையங்கள்.

3. இவ்வைந்து அருட்செயல்களும் முறையே அருளல், மறைத்தல், அழித்தல், காத்தல், படைத்தல் என அமையும்.



பிரசன்னமாயிருப்பதாக உணர்வோம். சந்தர்ப்ப சூழ்நிலைகள் நம்மைத் தவறான செயலொன்றிற் செலுத்தச் சதியாலோசனை பண்ணுமாயினும் நம்மிற் சிவசக்தி பிரசன்னமாயுளதென்னும் நினைவெழுந்து ஆற்றலுடன் அச்சதியை எதிர்த்து அதனால் நாம் ஆளப்படும் நிலைக்கெதிர் அவற்றினை நாம் ஆளும் நிலையை ஏற்படுத்தும். அங்ஙனம் பராசக்தி இடங்கொள்ளும் புனித நிலையாயிருக்கும் நாம் எங்ஙனம் தவறானதும் மடத்தனமானது மான செயலொன்றில் ஈடுபடும் நிலைக்கு இறங்க முடியும்? இந்த இழிதரச் செயல் நமக்குச் சில உலகப் பேறுகளை ஆக்கலாம். ஆனால், நாம் இழிதரமான இப்பேற்றுக்காக நம்மிற் பதிந்தி ருக்குஞ் சிவசக்தியை அவமதித்தலாகாது' என அவ்வேளை நம்பாட்டுக்கே சொல்லிக் கொள்கிறோம்.

சிவலிங்கமொன்றுக்கு அல்லது ஒரு தெய்வத்துக்கு அபிஷேகிக்கப்படும்போது திருநீற்றின் தெய்விக விளக்கம் இன்னும் அதிகமாகப் பேசப்படுகின்றது. மெய்ஞ்ஞானிகளின் கையால் வழங்கப் படுந் திருநீற்றுக்கும் இத்தகு மகிமை உளதாதல் உண்மையாகும். திலகவதி அம்மையார் கையால் அப்பர் சுவாமிகளான மருணீக்கியாருக்கு வழங்கப்பட்ட விபூதி, அவர்பாற் செயற்பாடற்றுக்கிடந்த, சிவ அன்பை உணர்ச்சிவசப் பட்ட வேகம் மிக்க அன்பாக மூண்டெழச் செய்திருக்கின்றது. பக்தி ஞானவான்களாயிருந்த ஆலய பூசகர் கையால் வழிபடு வோர் விபூதி பெற்றுக்கொள்ள ஆவல் கொண்டிருந்த காலமும் ஒன்றிருந்ததுண்டு.

நமது சமயாசாரியர் ஒவ்வொருவருமே திருநீற்றின் மகிமையைப் போற்றிப்பாடி அதனைப் பக்திபூர் வமாக ஏற்றணியும்படி நம்மை உற்சாகப்படுத்தி யுள்ளார்கள். "பூசில்தான் திருநீறே நிறையப் பூசி" - என மாணிக்கவாசகர் கூறுகின்றார். இங்ஙனம் நிறைய - நிறைவாகப் பூசுதல் பராசக்திபால் நமக்குள்ள உண்மையன்பைப் பிரதிபலிப்பதாகும். இதனை வெளிக்கச் செழிக்கப் பூசாதிருப்பது இதன்மேலுள்ள வேண்டா வெறுப்பு

நிலையைக் காட்டுவதாகும். இதற்கு மரியாதை கொடாமையைத் தெரிவிப்பதாகும்; இது பராசக்தியின் இருப்பிடமென்பதை அறியாத மடமையுமாகும். "திருநீறுஞ் சிவாலயமும் உள்ளத்துட் செற்ற புலையர் பாற் செல்லாதே" - என உமாபதிசிவம் தமது நெஞ்சுக்கு அறிவுறுத்துகிறார். திருநீற்றுக்கும் சிவாலயத்துக்கும் நெஞ்சில் உரிய இடமளிக்காதோர் தூய்மையற்றோர், பாபகாரிகள் என்பது அவர் கருத்து. மாணிக்கவாசகர் மற்றோரிடத்தில், 'வெண்ணீறணிகிலாதவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே' என்றருளிச் செய்துள்ளார். பொதுவில் சகலராலும் அஞ்சப் படுதற் குரிய நச்சுப்பாம்பு, கொடிய கூரம்பு என்பதற்குத் தாமஞ்சா ராயினும் திறுநீறு பூசத் தவறுஞ் சைவர்களைக் காணத் தாம் அஞ்சுவதாக இருக்கிறது அவர் திருவுள்ளம்.

சைவ உலகில் திருநீறு எங்குங்கிடைக்கத் தக்கது. இது எம்மால் வழிபட்டுவரப் பெறும் பசுவின் சாணத்தைச் சுட்டெடுக்கும் நீறாகும். சைவர்கள் குடியிருக்கும் எல்லாவிடங் களிலும் பசுக்கள் உள. இருந்தும், அதிர்ஷ்ட வசமாகவோ துரதிர்ஷ்டமாகவோ எங்கெங்கும் இது விலைக்கு விற்கப்படும் பொருளாய் விட்டது.





## அத்தியாயம் நான்கு
# வழிபாடு

வழிபாட்டின் உள்ளீடு கடவுள் பற்றிய நினைவாகும். சந்தேகத்திற்கிடமில்லா அளவுக்கு அந்நினைவு மற்றெலா நினைவுகளையும் விட இனிமை மிகு நினைவாகும்.

*"மனிதர் காள் இங்கே வம்ஒன்று சொல்லுகிறேன்*
*கனிதந் தாற்கனி உண்ணவும் வல்லீரே*
*புனிதன் பொற்கழல் ஈச னெனுங் கனி*
*இனிது சாலவும் ஏசற் றவர்கட்கே"*

என அப்பர் சுவாமிகள் அருளிச் செய்துள்ளார்.

மனிதர்களே, தயவு செய்து வாருங்கள், சும்மா ஒரு வார்த்தை. உங்களுக்கு நான் ஒரு கனி கொடுத்தால் நீங்கள் அதனை உண்ணவல்லீர் ஆவீரா? அது மிகத் தூய்மையானது. எல்லோ ரையுந் தன் திருவடிகளைச் சேருமாறு வென்றெடுக் கவல்லது. வெகு சுவை விசேடமான கனி அது. உண்மையில், மாசு மறுவற்ற தூயோர்க்கே அது அவ்வாறாகும் - என்பது பாடற் பொருள்.

நாங்கள் மல மாசுள்ளோராதலின் ஞானிகளாயுள்ளோர் பெறும் எல்லையற்ற ஆனந்தத்தை எய்த மாட்டாதவர் ஆகிறோம். எனினும் நாங்கள் எமது எண்ணத்தைக் கடவுள் பக்கம் திருப்பி அவரை வழிபடுவோமாயின் ஆகக் குறைந்த பட்சம் மட்டுப்படுத்தப்பட்ட அளவிலான ஒரு இன்பத்தை யாவது அடைவோம். அவ்வின்பம் மட்டுப் படுத்தப்பட்ட தாயினும் நாம் அடைதற்காம் இன்பங்களில் மிக மேலான தகைமையுள்ளதாகும்.

"பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் - பேற்றின், அருமைக்கும் ஒப்பின்மையான்" - என்று சிவன் மகிமையைத் தெரிவிக்கின்றார் உமாபதிசிவம். இதிற் சிவன் மகிமை பற்றிய அம்சங்கள் நான்கு ள்ளன. இந்நான்கையும் விளங்க முயல்வோம். ஆகாயத்தில் மிளிரும் நட்சத்திரங்கள் எண்ணற்றவை. இவற்றுள் ஆகச் சிறிய ஒன்று சூரியன். இருந்தும்

இச்சூரியன் பூமியைவிட 13,00,000 மடங்கு பெரியதாயிருக்கிறது. இப்படிப் பார்க்கையில் மட்டுக்கு மிஞ்சிய பரப்புடைய தாயிருக்கும் இப்பிரபஞ்சம் சிவன் முன்னிலையில் இல்லாத பொருளாகவே முடியும். அன்றியும் உயிர்ப்பும் உணர்வுமற்ற தான இப்பிரபஞ்சம் உயிர்களாகிய நம் முன் ஏதுமொன்றாகாத் தன்மையதாம். இவ்வுண்மையைப் பிரக்ஞை பூர்வமாக நினைதல் வழிபாட்டின் முதற்படியாகும். இதன் மூலம் இப்பிரபஞ்சத் தைவிட நான் மட்டற்ற அளவுக்கு மேலானவனாதல் கண்டும் உலக விஷயங்களில் எத்தகையதொரு மேலாள் தகைமையும் கோரமுடியாதவனாயுள்ளேன் நான். இவ்வுலகில் உள்ள யாதா மொரு பொருளும் உலக முழுமையின்முன் ஒரு புள்ளியளவி னதாக இவ்வுலகே பிரபஞ்சத்தில் ஒரு புள்ளியளவினதாயிருப் பதிலிருந்து, நண்பு - பகை; செல்வம் - வறுமை; உறவுண்மை - உறவின்மை; ஈர்த்தணைத்தல் - ஒதுக்கித் தள்ளல்; பூசித்தல் - தூஷித்தல் என்ற துவந்துவங்களாய்[1] உலகியல்கள் என்னில் ஏதொன்றும் விளைப்பனவாகா. அவை என்மனத்தைச் சிறைப் படுத்த முடியாது. அவை என்னைத் தம்முடையாக்கல் அதனி லும் பார்க்க அருமையாயிருக்கும். நான் அவை பற்றிய சிந்தனை களிலிருந்து விலகியுள்ளேன். என் சிந்தனை சிவன், சிவனது எல்லையற்ற கருணை எனும் இவ்விரண்டின் பேரில் மட்டுமே. நான் அவரையே தியானித்து அவர் புகழ் கூறுந் தோத்திரங் களையே பாடுகிறேன் என்றிருக்கும் நிலை வாய்க்கும். தமிழில் அளவற்ற தோத்திரப் பாடல்கள் உள்ளன. அவை ஒட்டுமொத்த மாக அவரையும் அவர் கருணையையுமே போற்றுகின்றன. பின்வருந் தோத்திரப் பாடல்கள் சைவர் ஒவ்வொருவரும் அறிபவை. அவை சிவன் புகழே பொருளாக உள்ளவை.

"உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்,
நிலவுலாவிய நீர்மலி வேணியன்,
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்."

1. ஒன்றுக்கொன்று எதிரான இரட்டைகள்.



"மூவிரு முகங்கள் போற்றி;
முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற
இராறு தோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள்
மலரடி போற்றி அன்னான்
சேவலும் மயிலும் போற்றி
திருக்கைவேல் போற்றி போற்றி!"

"தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந்துறை யுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யானிதற் கிலனொர்கைம் மாறே"

சிவனது மட்டற்ற பெருங்கருணை நிலையும் வழிபடு பவர் அவர் எதிரில் தான் ஒன்றும் போதா நாயனையனாஞ் சிறுமையும்பற்றிய பிரக்ஞை வழிபாட்டின் இரண்டாவது படியாகும். அது நான் அவரைச் சூரியனாகக் கருதுவேனாயின் அவரெதிரில் நான் ஒரு மின்மினியளவே. எனக்கும் ஏதும் உரிமை இங்குள்ளதாக நான் கருதற்கியலாது. அவரைப்பற்றி மாத்திரமே நான் நினைக்க முடியும். அவரது மட்டற்ற கருணைபற்றியே நினைக்க முடியும். உயிர்களைப் பாசங்களி லிருந்து விடுவித்து அவைகளுக்கு முடிவற்ற பேரின்பம் வழங்குதற் பொருட்டு ஐந்தொழில் நிகழ்த்தும் அவர் கருணையே கருணை. அவர் புகழ்களை நான் பாடுகிறேன். புனிதம் வாய்ந்த

மந்திர உச்சாரணத்துடன் அவரை மலர்களால் அர்ச்சிக்கிறேன். நான் தார்மிக வாழ்வு வாழ்கிறேன் என்றவாறான பிரஜ்னை யாயிருக்கும் சிவனைப் புகழ்தற்கு மிக நல்ல பாடல்கள் சமயாசாரியர் நால்வரின் பாடல்கள். பட்டினத்தார், தாயுமானவர் பாடல்களும் அங்ஙனமே.

இவ்வகையில், வழிபாடு ஐந்து படிகள் அல்லது மூலங்களைக் கொண்டுள்ளது. அவற்றுள் முதலாவது, இவ்வுலகப் பொருள்கள் மேற்செலும் உணர்விலிருந்து விலகுதல், இரண்டாவது உயிருருக்கமான தியானம். மூன்றாவது துதி வழிபாடு. நான்காவது மந்திர சகித அர்ச்சனை. ஐந்தாவது தார்மி வாழ்வில் ஈடுபடு மளவுக்கு மனத்தைத் தூய்மையாக்கல். இவை சிவஞானசித்தியார் செய்யுளொன்றிற் கணித் தமைக்கப்பட் டுள்ளன.

"மனமது நினைய வாக்கு வழுத்த
மந்திரங்கள் சொல்ல
இனமலர் கையிற் கொண்டங்
கிச்சித்த தெய்வம் போற்றிச்
சினமுத லகற்றி வாழுஞ் செயலற
மானால் யார்க்கும்
முனமொரு தெய்வ மெங்குஞ் செயற்கு
முன்னிலையா மன்றே."

உலகையுந் தன்னையும் மறந்து இயற்றப்படும் இவ்வகை வழிபாடு பரமசிவ வழிபாடாக அமைவு பெறும்.

பராசக்தி வழிபாட்டில் நாம் சிவனை மட்டுமன்று நம்மையும் சிந்திப்பவராகிறோம். நம்மைச் சிவனோடு தொடர்புறுத்துவது பராசத்தி ஆகையால் நம்மை அறிமுகஞ் செய்யாமல் நாம் பராசத்தி பற்றி நினைய முடியாது. பராசத்தி சிவன் கருணை. கருணை பற்றிய சிந்தனை இருபொருள்களை யுட்கொண் டமைகிறது. ஆகையால், பராசத்தி வழிபாட்டில்



எமக்கும் இடங்கொடுத்தல் அவசிய மாகிறது. நாம் அவளின் கருணைக்குப் பாத்திர மாயிருக்கிறோம் என்ற எண்ணத்துக்கு மேலாக இது இடம் பெற மாட்டாது. அவள் நமக்கு எல்லையற்ற இன்பம் அருள்பவள். அவ்வின்பம் குழந்தைக்குதவுந் தாய் முலைப்பாலின் தகைமையினும் அதிகமான மகிமையுள்ளது நமக்கு. தற்போதைய நிலையில் அவளே நமக் கடைக்கலம். அவள் என்றும் நம்முடனாயிருந்து நம்மைச் சிவனிடஞ் சேர்த்து வைப்பவ ளாவாள்.

வழிபாட்டின் மூன்றாவது படியில் நமது பாசப் பிரபஞ் சத்தையும் மறத்தல் கூடாது. இதன்கண் நம்மால் தியானிக்கப் படுவது ஆதிசத்தி, அது நம்மை ஆணவம், கன்மம், மாயை எனும் பாசங்களிலிருந்து விடுவிப்பது. ஆணவம் நம்மைக் குரு டாக்கிற்று. நாம் நம்முடனாயிருக்கும் உள்பொருளாகிய சிவனைக் காணாவண்ணம் மறைத்து நன்முறையில் நம்மைத் தன்னுடை மையாக்கிக் கொண்டுள்ளது அது. அதன் கொடூரப் பிடியிற் பட்டிருந்த நமக்கு மறைந்த கண்ணைத் திறந்து மறைக்கப்பட்ட உண்மைப் பொருளைத் தோன்றவைத்து நம்மை ஆணவத்தி லிருந்து மீட்பது ஆதிசத்தி. சிவஞான போதமுஞ் சித்தியாரும் உருவக நடையில் இதனை அழகாக விளக்குமாறு காணத்தகும். உயிர் என்ற சிறுவன் வேடர் குடியில் அகப்பட்டு வளர்ந்து தானும் வேடனேயாம் நிலையில் இருந்தானாக, சிவன் தனது எல்லையற்ற கருணைமிகுதியினாலே அச்சிறுவனுக்கு அறிவு தயந் தோன்றச் செய்து நீ என் மகன் என்று ணர்த்தி அவ்வேடர் சூழலி லிருந்து விலக்கியெடுத்துத் தானாந் தன்மை யளித்து உய்ய வைக்கிறான் - என்பது அவை தரும் விளக்கமாகும். குறித்த மூன்றுவகை வழிபாடும் எங்கள் சமயா சாரியர் அருட்பாடல்களில் விளக்க முறுதல் காணலாம். உதாரணம் :

"முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே"

இவ்வருட் பாடலில், முதலிலிருந்து 'சித்தமலமறுவித்து' வரையான பகுதி ஆதிசத்தி உபகாரமெனப்படலாம். 'சிவமாக்கி' பராசத்தி உபகார மாகலாம். 'எனையாண்ட அத்தன்' பரமசிவன் உபகாரமாகலாம். இவ்வாற்றால் சிவன் தனக்கு எல்லையற்ற கருணை பொழிபவனாய் இருப்பதை வழிபடுவோன் உணர்ந்து கொள்ளலாம். உணர்ந்து கொண்டவன் சிவனைத்தான் அன்பு செய்தல் மூலம் அவர் பொழியுங் கருணைக்குத் தக்கவாறு தானும் சிவனுக்கமைவாக நடந்து கொள்பவனாகின்றான். அன்பு அன்பைப் பிரசவிக்கிறது என்பது நாளாந்த அநுபவத்தோடொட்டிய விஷயம். சிவன் என்மேற் பாவிக்கும் அன்பு நான் அவரை அன்பு செய்யத் தூண்டுகிறது. அன்பிற்கு முக்கியமாக வேண்டப்படுவது யாதெனில், ஒருவன் தன்னால் இயலுமளவுக்குக் கூடுதலான முறையில் தான் அன்பு செய்தற் குரியாருக்கு ஒத்திணக்கமாக ஒழுகுதல் ஆகும். எனது அன்பின் விளைவாக நான் சிவனது ஆகம விதிகளுக்குக் கீழ்ப்படிந்து வாழ்கிறேன். உலக விஷயங்களில் என்னால் அதிகம் விரும்பப் படுவதொன்று எல்லா வேளையிலும் என் நினைவுக்கு வருதல் போல நான் வேறு வேலைகளில் ஈடுபடாமல் இருக்கும் வேளைகளிற் கூடச் சிவன்பற்றிய நினைவு என் மனத்திற் பட்டுக் கொண்டிருக்கின்றது. ஆகம வாயிலாகச் சிவன் வகுத்துள்ள விதிகள், சில சந்தர்ப்பங்களில் தோன்றுவதுபோல் எவ்வளவு தான் இதமற்றனவாக இருந்தாலும் நமது சொந்த நன்மை கருதி அமைவனவேயாம். இங்ஙனம் சிவனுக்குப் பணிந்தொழுகல் மூலம் எங்கள் அன்பு தன்னளவில் வியாபகமாகின்றது. அதன் மூலம் என்றைக்கும் நிலை பெறுவதான எமது நன்மைக்கு ஆவன செய்கின்றது.

சிவனது அன்பு நம்மவர் எல்லோர்க்கும் ஒரே தரத்ததாயினும் நம்மவர் அன்பு தன் உள்ளடக்கச் செறிவிற் சமத்துவம் வாய்ந்ததாயிருப்பதில்லை. சிவனுக்கு நாம் செயத்தகும் அன்பைத் தர வேறுபாடுபற்றி நால்வகையாகப் பகுத்துணர்த்தியிருக்கிறது சிவாகமம். தாசனின் அன்பு, மகனின் அன்பு.



தோழனின் அன்பு, ஏகீபாவ அன்பு[2] என அவை பெயர் பெறும். ஆகமம் இந்நால்வகை அன்புக்கும் வழிபாட்டுமுறை வேறுபாடுகளையும் வகுத்துள்ளது. இந்நான்கு நிலைகளும் முறையே சரியை, கிரியை, யோக, ஞான நிலைகளைச் சார்வனவாகும்.

ஆலயங்களில் உடலுறுப்புகளாற் சிவப்பணி செய்தல்[3] சிவனடியார்க்குச் சேவை செய்தல் நன்கு உருவாக்கப்பட்ட மகேஸ்வரர் விநாயகர் சுப்பிரமணியர் எனும் மூர்த்தங்களில் ஒன்றுக்குப் பூசை செய்தல் என்பன சரியை வழிபாட்டில் அடங்கும். அருவுருவத் திருமேனி யாகிய சிவலிங்கத்தைப் பூசித்தலில் அன்பு வியாபிக்கப் பெற்றிருத்தல் கிரியையாகும். சரியை நிலையிலுள்ளோருஞ் சிவலிங்கத்தை வழிபடலாம். ஆனால், பூசித்தலாகாது. சரியைத் தரத்தில் மனத்திலும் பார்க்க உடலுக்குச் செயற்பாடு கூடுதலாயிருக்க, கிரியைத் தரத்தில் உடல் தொழிற் பாட்டினும் பார்க்க மனத் தொழிற்பாடு கூடுதலாயிருக்கும். யோகத் தரத்தில் வழிபாடு முற்றிலும் மனத் தொழிற்பாடாகவே அமையும். இம்மூன்று தரங்களிலும் வழிபடுவோன் சிவனைத் தன்னின் வேறாகக் காணும் நிலையுண்டு. நான்காவது தரமான ஞான வழிபாட்டில் வழிபடுவோன் அருட்பாவனையால் தன்னைச் சிவனாகவே இனங்கண்டு கண்டு முடிவில் தன்மையால், சிவனோடொன்றா கின்றான். இதுவே வழிபாட்டின் முடிவான இலக்காகும்.

இவை இருக்க, வழிபாடு என்ற பெயரில் நாம் சிவனை அணுகும் மற்றொரு முறையும் உண்டு. அது வழிபாடு என

---

2. சிவன் வேறு, தான் வேறென்றில்லாது 'சிவன் நான்' என அருளாற்பாவனை பண்ணும் நிலையில் உளதாம் அன்பு. குறித்த பாவனை 'சிவோஹம் பாவனை' எனப்படும்.
3. அப்பர் சுவாமிகள் இதனை இவ்வாறு வர்ணிப்பர் :

நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சய போற்றி போற்றி என்றும்
அலைபுனல் சேர் செஞ்சடையெம் ஆதீஎன்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே.

அழைத்தற்குச் சற்றும் பொருந்தாத ஒன்றாகும். இவ்வழிபாட்டில், உடம்புக்கும் உடல்சார் விஷயங்களுக்குமே முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றது. தன்னைச் சார்ந்த சுயநல எண்ணங்கள், பெண்டு பிள்ளைகளின் நன்மை, தனது பதவி உத்தியோக பண அபிவிருத்தி நோக்கிலான அபிலாஷைகள் போன்ற உலகியல் சார் விஷயங்களே இவ்வழிபாட்டில் வழிபடுவோன் உள்ளத்தை ஆக்கிரமித்து விடுகின்றன. இத்தகு நினைவுகள் வழிபாட்டுக்குப் பொருந்தாதனவாம். அவை சிவன் நினைவோடு உடன் நிகழ்தற் பாலன வாகா. அத்தகு சிந்தனைகளுக்குச் சிவன் முன்னிலையில் இடம் இல்லை. அவை ஆணவத்[4] தொழிற் பாட்டாலாவன. எம்மா லியலுமளவுக்கு இச்சிந்தனைகளின் வலுவை எமது நேர்மையான முயற்சியால் மெலிவித்துக் கொள்ள வேண்டும். அன்றியும், நாம் வழிபாடொழிந்திருக்கும் போதில் விரும்பினால் இவைகளைப் பற்றிச் சிந்திக்க நமக்குப் போதிய அவகாசமுண்டு. தினசரி ஒரு மணித்தியாலம் நாம் வழிபாட்டில் ஈடுபடுவோமாக, விழித்தி ருக்கக் கூடிய நமது நேரத்தில் குறைந்த பட்சம் பதினைந்து மணித்தியாலங்கள் இதற்கென இருக்கின்றன. குறித்த இவற்றில் சில நமது முன்னை வினைப்பயனாக நேர்பவை. சில நமது கடின உழைப்பின் பலனாக அமைபவை. ஏனைய என்றும் அடைதற் கியலாதவையாயிருக்கும். வழிபாடு, இவற்றுக்காகச் செயத்தக்கது யாதுமில்லை. எமது கர்மம் எவ்வெப்பேறுகளுக்கு நாம் பாத்திர மாம் நிலையை அளிக்குமோ அவற்றை மட்டுமே நாம் பெறுபவர் ஆவோம். கடவுளை வேண்டுதலால் மாத்திரம் மேற் கண்ட நன்மைகளில் எதையும் நாம் அடைவதில்லை. அப்படியல்ல[5] அடைந்தே தீர்வோம் என்பதாயின் கர்மவிதி என உள்ளதும் அதன்சார்பில் நமது சமயமும்கூட மண் கவ்வும். கடவு ளிடமிருந்து சகாயம் பெற வேண்டுதல் பண்ணும் ஒவ்வொரு

4. இச்சொல் இங்கு அட்சர கணிதப் பொருளில் ஆளப்படுகிறது.

5. பரீட்சகர் ஒருவரை எவ்வளவுதான் மன்றாடினாலும் தன் தகுதிக்கு உரிய அளவைவிடக் கூடுதலான புள்ளியை மாணவனொருவன் பெறுதல் இயலாது.



வனும் தான் வேண்டுபவற்றில் ஒருசிலவற்றையே அடைபவன் ஆகின்றான். அச்சிலவும் அவனது கர்மப் பேறாவனவே. கட வுளை வேண்டாத நிலையிலும் இவற்றை அவன் பெற்றிருப்பான். கடவுளை வேண்டாமலே தினசரி அளவற்ற வாழ்வியற் பேறுகளை நாம் பெற்றுக் கொண்டிருக்கிறோம். நாம் காணத்தக்க தாகவே, கடவுளை வேண்டும் போக்கில்லாத நாஸ்திகர் தாம் விரும்பும் அளவற்ற பேறுகளைப் பெற்றுக்கொண்டிருக்கிறார்கள். இவ்வாறு பொதுவில் உலக இன்பங்களுக்காக் கடவுளை வேண்டுதல் ஆன்ம சக்தியை வீணாக்குவதா யொழியும்[6] கடுந் தவங்கள் செய்து மனிதர் கடவுளிடமிருந்து உலகியற் பேறுகள் பெற்றுள்ளதாகப் புராணங்கள் கூறுவன அவர்கள் உழப்புக்கு ஊதியம் பெற்ற கதையளவே. மார்க்கண்டேயர் ஆயுள் நீடிக்கப்பட்ட தென்பதும் அவர் பூசைக்கேற்ற கூலி அது என்னுமளவே. "மைந்தா நீநமைவழுத்தி மாசிலா முந்து பூசனை முயன்ற தன்மையால் அந்தமில்லதோர் ஆயுள்நிற்கு யாம் தந்து நல்கினாம் என்று சாற்றினான்" என்பது காண்க. (கந்தபுராணம்)

6. தவறென நிரூபிக்கப்பட முடியாத ஒரு நியாய வாதம் இதுவாகும். எனினும், வேண்டுகோள் சார்பான தேவார திருவாசகங்களை ஆதாரங் காட்டி இதை மறுப்பாரும் உளர். முதலாவதாக, அவ்வேண்டுகோள்களின் யதார்த்தமான உட்பொருள் யாதென நாமறியோம். இரண்டாவதாக, அவற்றை விடுத்த சமயாசாரியர்கள் சிவஞானத்தில் முடிவுகாண இயலா அளவுக்கு மேலானவர்கள். ஆதலால், அவர்கள் செயல்கள் ஏதொன்றின் மீதும் நியாயத் தீர்ப்பு மேற்கொள்ளும் அருகதை நமக்கின்றாம். நரிவால் கொண்டு கடலாழங் காணும் முயற்சி போல அவர்கள் செயலின் மூலத்தைக் கண்டறிய ஆரேனும் முயல்தல் கூடும்.

## அத்தியாயம் ஐந்து

# வழிபாட்டிடங்கள்

வீடும் ஆலயமும் வழமையான வழிபாட்டிடங்கள். சமயப் பிடிப்புள்ள ஒருவருக்கு எந்த இடமும் வழிபாட்டுக்குகந்த நல்ல இடமாம். நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும் எல்லா நேரத்திலும் சிவன் திருவடிகளை நினை என்று அத்தகைய ஒருவர் கூறியுள்ளார்.[1] அதிகமானோர் வீட்டில் நிகழ்த்தும் வழிபாடு சுருக்கமான முறையில் இலகுவானதாயிருக்கும். தேக சுத்தி செய்த கையோடு அவர்கள் சில நிமிஷங்கள் வழிபாட்டி லீடுபடுவர். சிலர் ஒருசில கடவுள் தோத்திரங்களையும் படிப்பர். மனத்தைக் கடவுளிற் பதித்துக் கொண்டு சிலர் நூறு தரம் மந்திர செபமுஞ் செய்வர். ஏனையர் இவ்விரண்டையும் உள்ளடக்கிய சந்தியாவந்தனமுஞ் செய்வர். சிலர் நீண்ட நேர வழிபாட்டமைதியோடு கூடிய பூசையுஞ் செய்வர். அதிகமானோர் உணவு வேளை ஒவ்வொன்றுக்குஞ் சற்று முன்னாகச் சிறிது நேரக் கடவுள் தியானஞ் செய்வர். கால் முகங் கழுவியதும் சில மந்திரங்களைச் சில தடவை உச்சரித்து வழிபடல் பொது வழக்கமாகும். குறிக்கப்படத் தக்க ஒரு தொகையினர் படுக்கைக்குப் போகும் போதும் உறங்கி விழிக்கையிலுங் கடவுள் தியானம் புரிவர்.

ஆலயத்தில், மன எழுச்சியுற்ற சனத் தொகுதி பங்குபற்றும் பூஜையில் மனம் மிகவும் ஈடுபடுத்தப்படுகிறது. ஆலயம் வழிபாட்டுக்கு இன்றியமையாத அனைத்துச் சாதனங்களோடுங் கூடியதாய் வழிபாட்டு வசதிகளைப் பொறுத்தமட்டில் வீட்டு நிலையிலிருந்து மிக உயர்ந்ததாய் இருக்கும். படிப்பு வசதிகளைப் பொறுத்த மட்டில் வீட்டைவிடப் பாடசாலை உயர்ந்ததாயிருப்பது போல்வது இது. ஆலய வழிபாட்டின் தனித்துவப் பெறுமானம் சைவசமயத்தினால் மட்டுமன்றி மற்றைய ஒவ்வோர் சமயத்தினாலும் அங்கீகரிக்கப்

1. நின்று மிருந்துங் கிடந்தும் நடந்தும் நினை என்றுஞ் சிவன்றா ளிணை.



பட்டிருக்கின்றது. புரொட்டஸ்தாந்த கிறிஸ்தவ மதத்தினர் வெறும் மண்டபம் மட்டும் வழிபடுமிடமாகக் கொண்டு அது தமது சமய வாழ்வுக்கு இன்றியமையாததெனக் கருதுகின்றார்கள். கிறிஸ்தவர்கள் தமது வழிபாட்டு நிலையத்தைச் 'சேர்ச்' என்கின்றார்கள். இப்பெயரினர்த்தம் கடவுளிருக்குமிடம் என்ப தாகும். இவ்வார்த்தை சமயத்தையே உணர்த்த வந்துள்ளது என்னுமளவுக்கு இதற்கு உயர் பெறுமதி வழங்குகிறார்கள். உதாரணத்துக்காகப் பார்த்தால், இங்கிலாந்துச் 'சேர்ச்' ஆங்கிலநாட்டு மக்களின் சமயம் என்றே கருதப்படுகிறது. எமது சமயாசாரியர்கள், ஆலயம் ஒரு கிராமத்தின் அல்லது நகரத்தின் உயிர்நிலையம் எனக்கருதுகிறார்கள். கோயில் இல்லா நகரம் நகரமாகாது; அது வெறுங்காடே என்கிறார் அப்பர் சுவாமிகள்.[2] இதன் மூலம் அந்நகரவாசிகள் வனவிருட்சங்களைவிட மேலானவர்களன்றென அவர் கருதுகின்றார் எனல் தெரிகின்றது. 'சிவாலயம் பற்றிய நினைவைக் கொன்று விட்டிருக்குஞ் சண்டாளரிடஞ் செல்லாதே' என உமாபதிசிவம் தமது நெஞ்சுக்கு அறிவுறுதுகின்றார். ஆலயம் என்பது கடவுளின் சாந்நித்யம் பிரத்தியேகமாக உணரப் படும் நிலையம். வேறெக் கேளிக்கைகளுக்குமல்லாது வழிபாடொன்றுக்கே அது உரிய இடம் என எல்லாச் சமயத்தவருங் கொள்கின்றார்கள்.

சைவர் ஒருவர் ஸ்நாநாதி தூய்மைகண் செய்த பின் உணவெதுவுங் கொள்ளாமலே கோயிலுக்குச் செல்கின்றார். ஸ்நானம் அவர் மனத்தைப் பதப்படுத்தித் தியானத்துக்குக்குத் தகுதியான நேர்மை கூர்மைகளை விளைக்கிறது. உணவிட்டு நிறைக்காமல் வெறுமையாயிருக்கும் வயிறு மன ஒருமைப்பாட்டுக்கும் சுய அடக்கத்துக்கும் உதவுகிறது. ஆலயத்தை நோக்கி நடையிடும் போதெல்லாம் அவர் கடவுள் நினைவிலேயே ஈடுபட்டிருக்கின்றார். ஏதாவது சில மந்திரங்களையோ திருமுறைப் பாடல்களையோ உள்ளூர ஓதிக்கொண்டே நடையிடுகின்றார்.

2. திருக்கோயி லில்லாத திருவிலூரும்...... அடவி காடே

அவ்வகையில் அவர் அயற் கவர்ச்சிகளால் ஈர்க்கப்படாது பாதுகாக்கப்படும் மன ஒருமையோடு ஆலயஞ் சேர்கின்றார். ஆலயத்துள் நுழைந்ததும் விழுந்து கும்பிட்டு உடலையும் உள்ளத்தையுந் தூய்மையாக்கிக் கொள்கின்றார். கடவுளின் தூய சந்நிதியை அடைந்து அதில் தான் அமைந்திருக்கக் காண் கின்றார்.

ஆலய மூர்த்தி மும்மடங்கு தெய்விகமானது. அது விக்ரஹம் எனப்படுகிறது. அது உடம்பைக் குறிக்கிறது. நாம் நமதுடம்பையே நாமாக இனங்கண்டு கொள்ளுமாறு போல கடவுளை விக்ரஹமாக இனங்கண்டு கொள்கின்றோம்.

இரண்டாவதாக, விக்கிரகஹங்கள் கடவுளைக் குறிக்கின் றன. மிக முக்கியமான குறியீடுகளிலொன்று நடராஜ விக்கிரஹம். அதைச் சூழ்ந்திருக்கும் திருவாசி பிரணவம். சிவம், பராசத்தி, உயிர், திரோதானம், மலம் எனும் உள்பொருள்கள் ஐந்தின் அடக்கமாக உள்ளது பிரணவம். வலதுபக்கக் கரங்களிரண்டில் ஒன்றில் உள்ள உடுக்கு[3] அவரே படைத்தற் கடவுளாதல் காட்டும். மற்றக் கரம் அவரே காத்தற் கடவுளுமாதல் காட்டும். அபயகர மென்னப்படும் இக்கரம் 'எதற்கும் அஞ்சற்க' என்றுணர்த் துவதாம். ஒரு கரத்தில் விளங்கும் அக்கினி அழித்தல் குறிக்கும். முயலகனை அழுங்க அமுக்கிக்கொண்டிருக்கும் வலதுபாதம் ஆணவம் நெரித்தழிக்கப்படுதல் காட்டும். தூக்கிய திருவடி வீட்டின்ப மளித்தலைக் காட்டும். முகத்தில் தவழும் புன்முறுவல் வழிபடுவோரை வரவேற்குங் குறிப்பாம்.

நடராச மூர்த்தியின் கருணைப் பிரபாவங்களை அறிகுறி மாத்திரையால் உணர்த்துவதுடன் அவை வழிபடுவோரில் தமது செல்வாக்கைச் செலுத்தி அவரை வசீகரிப்பனவாயும் உள்ளன. கையிலிருக்கும் உடுக்கானது கடவுளுடன் ஒன்றாதற்கே அவர்கள் படைக்கப்பட்டிருக்கிறார்கள் என்ற உண்மையை

3. சாதாரண உடுக்கு அசைவே தன்மயமான ஒலியை உண்டாக்குகிறது. பிரபஞ்சமும் ஒரே அசைவு மயமே.



உணர்த்தி அவர்கள் சமய வாழ்வில் ஒழுகக் கடமைப்பட்ட வர்கள் என்பதை அறிவுறுத்துகின்றது. எடுத்துக் கவித்த அபயகரம், அவர்கள் அச்சந் தவிர்த்திருந்து பேரிழப்புகள் பற்றிச் சிந்திக்காது சரியானவற்றைச் செய்தொழுக[4] வேண்டும் நிறை யைக் குறிக்கின்றது. அக்கினியானது, எந்நேரமும் அது தங்களை அழிக்கலாம் என அவர்கள் உணர்ந்து தம் ஆற்றல்களையும் நேரத்தையும் உபயோகமான வழியிற் செலவிடுமாறு அறிவிக்கின்றது. ஊன்றிய வலது கால், அவர்கள் ஆணவச் சார்பான தமது பிரியாப் பிரியங்களைத் தாமாகவே நசுக்கிக் கொள்ளுமாறு தூண்டுகிறது. தூக்கிய திருவடி அவர்களுக்குச் சிவானந்த இன்பம் வழங்கப்படுமாற்றைக் காட்டுகிறது. அதைப் பெறுதலே அவர்களின் முடிவான இலக்கு. அதை நோக்கி அவர்கள் நெறிதவறாது நேரடியாக முன்னேறக் கடமைப்பட்டுள் ளனர்.

இங்ஙனம், இக்குறிகளாற் கொடுக்கப்படுந் தூண்டுதல் வழிபடுவோனிடத்தில் பொருந்துமளவான பதிலியக்கத்தையும் விளைப்பதாகும். படைத்தல் உணர்த்துங் குறியைக் கண்டு அவன்தான் கடவுளாற் படைக்கப்பட்ட ஒருவனாக உணர்கிறான். அத்துடன் சிவானந்தப் பேறடைதற்காகவே தான் படைக்கப் பட்டிருப்பதாகவும் அது கைகூடும் பொருட்டுத் தான் தன் நினைவு, சொல், செயல் மூன்றுஞ் சிவன்பாற் செல்லும் அன்பாற் சூழப் பட்டுத் தான் சிவமாதற்கு முயல வேண்டும் எனவும் தெரிந்து கொள்கிறான். காத்தலைக் குறிக்குந் திருக்கரம் ஒழுக்கப் பிடிப்புள்ள சமய வாழ்வில் தான் ஈடுபட வேண்டும் என்ற பொறுப்புணர்வை அவனிடந் தோற்றுவிக்கிறது. மரணம் எந்நேரமும் வரலாம் ஆதலின் நிகழ்காலமே செய்யத்தகுவ தெதற்கும் பொருத்தமான காலம். எதிர்காலம் நம்பற் கியலாதது

4. "தோற்றம் துடியதனில் தோயுந் திதி யமைப்பிற்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமா
ஊன்று மலர்ப் பதத்தே உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப் பதத்தே நாடு"

என உணர்தல் அப்பொறுப்புணர்வு அவனுக் கேற்படுவதாகும். மூன்றாவது கரமாகிய அக்கினி யேந்திய கையின் தரிசனத்தால் அப்பொறுப்புணர்வுக் கேற்ப நிகழ்காலத்திலேயே ஆன்ம ஈடேற்றத்துக்குக் கடுமையாக முயல வேண்டுந் துணிவு பெறுவான். வலது கால் தரிசன மூலம் தனது பிரியாப் பிரியங்களைக் கீழமுக்கி அவற்றைத் தன் கட்டுப் பாட்டில் அடங்கக் கொள்ளும் ஆளுமைத் திறம் பெற அவாவுவான். தூக்கிய திருவடித் தரிசன மூலம் கடவுளிடத்தில் இருதய பூர்வமான அன்பு செலுத்தி அவர் திருவடிகளையே இடையறாது தியானிக்கும் பக்தி யுணர்வு வளம் வாய்க்கப் பெறுவான்.

மற்றுந் தெய்வ விக்கிரகங்கள் பல அபய கரம் வரத கரம் என இரண்டு கொண்டவையாயிருக்கும். அவற்றில் முன்னையது பாதுகாப்பளிப்பதும் பின்னையது சிவானந்த இன்பம் அளிப்பது மாம்.

ஆன்மிக உயர்தரம் வாய்ந்தோர் வழிபாட்டுக் குரியதெனக் கருதப்படுஞ் சிவலிங்கம் விசேஷார்த்த நோக்கில் மிக வீரியம் வாய்ந்ததாகும். லிங்கம் ஞானத்தையும் அதன் பீடம் கிரியையையும் உணர்த்துவன. முன்னையது, கடவுள் எல்லாமறிபவர். சகல வித அறிவுகளுக்கும் அவரே மூலம் என்பதைக் காட்டும். மற்றையது, அவரே முதல்வர். அவர் பஞ்சகிருத்தியம் நிகழ்த்துபவர் எனல் காட்டும். பரமேஸ்வரன் என்ற தன் நிலையில் அவர் எமக்கு மேலானவரும் நமக்குத் தொடர்பற்றவருமாவர். பதி என்ற நிலையில், அவர் நம்மிடத்தில் உளர். நம்மோடுடனாயுளர். எம்மைப் பாசங்களிலிருந்து விடுவிப்பவருஞ் சிவப்பேரின்பம் வழங்குபவருமாயுளர். தமது ஐந்தொழில்களில், சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம் என்ற நான்கினாலும் நம்மை ஆணவத்திலிருந்து விடுவிப்பவரும் அநுக்கிரஹத்தினால் நமக்குப் பேரின்பம் வழங்குபவரும் ஆகின்றார். இலிங்கம் என்ற பதம் 'லயம்' 'கம்' எனும் இரண்டின் தொகைமொழியாகும். 'சித்து' 'சடம்' எனும் இரண்டன் மயமான



பிரபஞ்சத்தைத் தோற்றி ஒடுக்குவது எனல் அதன் பொருளாகும்.

கடவுளின் மற்றொரு விசேஷ மூர்த்தம் சூரியன். இது, பூமியைப் போல் பத்திலட்ச மடங்குக்குங் கூடுதலான பரப்புள்ள தாயிருந்து கடவுளின் அளவிறந்த பெருமைபற்றிய எண்ணத்தை நம்மில் தோற்றுவிக்கிறது. மற்றெந்த மூர்த்தமேனும் இதனைத் தெளிவாகவும் திருப்தியளிக்கும் விதத்திலுந் தோற்றுமாறில்லை. இவ்வுலகிற் சீவ பிராணிகள் இதன் சந்நிதியிற் பிறந்து வாழ்ந்திறக்கின்றன. கடவுளின் சந்நிதி மாத்திரத்தில் இப்பிர பஞ்சம் தோற்ற ஒடுக்கங்களை அடைவதெவ்வாறு என்பதை இது காட்டுகிறது. சூரியனிற் கடவுளைக் கண்டு வணங்கும் முறை சிவபூசையில் முதல் விஷயமாகும்.

மூன்றாவதாக, ஆலயத்தில் மூர்த்தி பிரதிஷ்டையின் போது கடவுளுக்குரிய மந்திர ரூபம் மூர்த்தத்தில் அழுத்தப்படு கிறது. இம்மந்திர ரூபம் மூர்த்தம் அமைக்கப்பட்டிருக்குங் கல்லையோ உலோகத்தையோ மேவி நிழலிட்டு நின்று எம் முன்னிலையில் கடவுளாகவே மிளிர்கின்றது. மந்திர மூர்த்தத்தில் கடவுள் தயிரில் வெண்ணெய் போல் விளங்குவதாக ஞானிகள் சொல்கிறார்கள். பிரதிஷ்டையின் பின் நாளாந்தம் நடைபெற்றுக் கொண்டிருக்கும் மந்திர பூசை மேன்மேலதிகமாகக் கடவுள் சாந்நித்தியம் காட்சிக்கு விஷயமாகச் செய்கின்றது. தயிர் கடையப்படும்போது வெண்ணெய் தன் உண்மை உருவத்தில் மிதந்து வந்து காட்சிக்குப் புலனாவது போல அமைகிறது இது. ஆதலால், நாம் அன்போடு பிரஜ்ஞைபூர்வமாக விழிப்புணர் வுடன் ஆலயத்திற் கடவுளை வழிபடுவோமாகில் அவர் நமக்குத் தரிசனந் தந்தருளுவார்.[5] சைவ சமயாசாரியர்களால் தரிசிக்கப் பெற்ற சிவாலயங்கள், அவர்கள் அங்கங்கு செய்து கொண்ட

5.விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுகவாங்கிக் கடைய முன் நிற்குமே.

பிரார்த்தனைகளின் வலுவினால் சாதாரண பிரதிஷ்டையோடிருக்கும் ஆலயங்களைவிடக் கூடுதலான திருவருள் விளக்கம் உள்ளனவாகின்றன.

இனி, ஆலய பூசையைப் பற்றிக் கவனிப்போம். அதன் மிக முக்கியமான விஷயங்கள் மூர்த்தியை நீராட்டுதலாகிய அபிஷேகம், அலங்காரம், நைவேத்தியம், தீபாராதனை, பத்திர புஷ்ப அர்ச்சனை, தோத்திரம் என்பனவாம். பாலும் நெய்யுங் கொண்டு[1] அபிஷேகஞ் செய்தல் மூர்த்தியில் நமது அன்பைச் சொரிதற்கு அறிகுறி யாகும். அன்னமும் பழமும் நிவேதித்தல் குழைந்து கனிந்த நமது மனத்தை அர்ப்பணித்தற் கறிகுறியாகும். தூப தீப[2] ஆராதனை சிவஞானத்தால் உயிர் விளக்கம்நேர்தற்கு அறிகுறியாகும். இவ் விரண்டில் தூபம் ஆணவத்தை அடக்கு தலையும் தீபம் ஆன்மப் பிரகாசம் நேர்தலையுங் குறிப்பன. பத்திர புஷ்பார்ச்சனை தெய்வபத்தி[3] மிகுந்து வீட்டின்ப முறுங் குறிப்பாகும்.[4] கர்ப்பூரதீபஞ் சுற்றுதல் கடவுளோ டொன்றாதலைக் குறிக்கும்.[5] தோத்திரம் பொதுவிற் சமயாசாரியர் அருளிச்செயல் களாகிய பத்திப் பாடல்களைக் கொண்டமையும். இங்ஙனம் பூசை வழிபாடு, கடவுளில் அன்பு சொரிதல், அவரில் மனத்தை ஈடுபடுத்தல், ஆணவத்தைக் கீழமுக்கல், ஆன்மப் பிரகாசம் பெறுதல், இவற்றின் வாயிலாக இறைவனோ டொன்றாக முயல்தல் என்ற உயர்பெரும் விழுமி யங்களைக் கொண்டுள்ள தாகும். அன்பும் ஞானமும் ஆலய மூர்த்தியிடமிருந்து கதிரலைகளாக வீசி ஆணவ சக்தியை யழித்து எமக்கு இன்பமும் ஆன்ம ஞானமும் வழங்குகின்றன. இவ்வழிபாட்டம் சங்களில்

(1) அப்பர் சுவாமிகள் கூற்று : " நேயமே நெய்யும் பாலாய்"

(2) "மன அமைதி பிறத்தற் பொருட்டு நைவேத்திய முகவாசமும் நல்கி" - சதாசிவ ரூபம்

(3) "ஞான விளக்கம் நண்ணுதற் பொருட்டுத் தூப தீபம் துதைந்தினி தளித்து" - சதாசிவரூபம்.
"ஊனிலுயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்ஞான விளக்கினை ஏற்றி"- திருஞானசம்பந்தர்

(4) "சித்தம் தெளிவீர்காள் அத்தன் ஆருரைப் பத்தி மலர்தூவ முத்தி யாகுமே"- திருஞானசம்பந்தர்.
"நறு மலரதனை நல்வீட்டின்பம்
குறுகுதலேது வாகவும் கொடுத்து" - சதாசிவ ரூபம்.

(5) "தீதணையாக் கர்ப்பூர தீபமென நான் கண்ட சோதியுடன் ஒன்றாகித் துரிசறுவ தெந்நாளோ" - தாயுமானவர்.



இறுதியாக உள்ள ஒன்று வழிபாட்டியல்புகளுள் மிக மகிமைவாய்ந்த ஒன்றாகும். வழிபடுபவர் தமது வழிபாட்டுப் பலனைக் கடவுளுக்கே அர்ப்பணிக்கின்றார். வழிபாடும் ஒரு கர்மமாயிருத்தலால் அதுவும் வழிபட்டவர்க்கு வழிபாட்டுப் பயன் கொடுக்க வேண்டியதாயுள்ளது. அவர்க்கு அது மிகவும் அநுகூலமானதே. ஆனால் வழிபாட்டின் யதார்த்த நோக்கம் யாதேனுங் கைம்மாறு கருதியதாகாது. கடவுளை நினைத்தெழும் அன்பின் தூண்டுதலினாலேயே அவர் வழிபடுகின்றார். சுயமான ஆன்ம திருப்திக்காகவே அவர் வழிபடுகின்றார். உள்ளளூர மூண்டெழும் அவாவைத் திருப்தி செய்வதற்காகவே அவர் வழிபடுகிறார். அதனால், வழிபாட்டுக் கைம்மாறாக எதனையும் ஏற்கும் நிலையில் அவர் இல்லை. ஆனால், அவர் விரும்பினுஞ் சரி விரும்பா தொழியினுஞ் சரி கர்ம நியதிக்குரிய விதிப் பிரகாரம் நிச்சயமாகக் கர்மபலன் அமைந்தாக வேண்டும். ஆகையால், அதனைத் தவிர்த்துக் கொள்ளும் உபாயமாக அவர் அதனைக் கடவுளுக்கே அர்ப்பணித்துக் கொள்கிறார். அங்ஙனம் தன் பூசை வழிபாட்டுப் பலனை அர்ப்பணித்துக் கொள்ளல் சார்பாகத் தன்னையே கடவுளுக்கு அர்ப்பணித்துக் கொள்பவராகின்றார். பூசிப்பவர் தம்மை முற்று முழுதாகக் கடவுளுக்கு ஒப்புக் கொடுத்தலே பூசையின் முதலும் முடிவுமாகும். அதனால் அவர் தம்மை ஒப்புக் கொடுத்த போதே பூசைப்பலனும் ஒப்புக் கொடுக்கப்பட்டுவிட்டதாகலாம். இருந்தும் அவர் தான் தன்னை ஒப்புக் கொடுத்தமை சரியான பலன் விளைக்கப் போதாக் குறையா யிருக்கலுமாம் என்ற அச்சங் காரணமாகப் பூசைப்பலனைத் தனியாக ஒப்புக் கொடுப்பவராகின்றார். இவ்வாறு பூசைப்பலனையுங் கடவுளுக்கே ஒப்புக் கொடுப்பவர் கடவுளை நோக்கியெழும் உள்ளார்ந்த அன்புருக்கத்தினாலாம் விருப்பத்தைத் திருப்திப் படுத்துதற்காகவே பூசை செய்பவர் என்பது உறுதி. இவ்வகையிலாம் பூசைப் பெயர் நிஷ்காமிய பூசை, இலாபமடைதற்கென எதுவுமற்றது என்பது அதன்பொருள்.

ஆனால், அங்ஙனம் பூசைப்பலனைக் கைவிட்டுவிட மாட்டாதோரும் உளர். பூசை முடிவில் அவர்கள் சண்டீசர் பூசை செய்து அவர் மூலம் பூசைப் பலனைப் பெற்றுக் கொள்கிறார்கள். இப்பலன் வழமையாக ஆன்மப் பிரகாசம் அல்லது ஞானமாகவே இருக்கும்.[7] இனி, மூன்றாவது வகையினரான ஒரு பகுதி வழிபாட்டாளர் தனிப்பட்ட பேறுகளைக் கருத்திற் கொண்டு பூசை செய்கிறார்கள். அவர்களிற் சிலர் கருதிய பலனைப் பெற்றுக் கொண்டதாகப் புராணங்கள் கூறும்.

7. "புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தினாலே
நண்ணிய ஞானத்தால்" - சிவஞானசித்தியார்.





## அத்தியாயம் ஆறு
## பஞ்சாட்சரம்

சைவத்தின் அதியுயர் மகிமைக்குரியதாயிருப்பது பஞ்சாட்சரம். திருநீறு, ஆலய வழிபாடு என்பன போல இது அனைவருக்கும் வசதியாயிருப்பதன்று. சைவரொருவர் சிவ தீட்சையிற் குரு மூலமே இதனைப் பெற்றுக் கொள்ளலாம். தீக்ஷை என்பது மலத்தை அழித்துஞானத்தைக் கொடுக்கும் ஒரு சமயக் கிரியையாகும். தீக்ஷை என்ற பதம் தீ (கொடு) க்ஷா (அழி) என்ற இரு வினை முதனிலைகளின் சேர்க்கையாலானது. இதிற் கொடுக்கப்படுகிற ஞானம் பஞ்சாட்சரம்.[1] அதாவது ஐந்தெழுத்து களாலான மந்திரம். இவ்வைந்தெழுத்துக்கள் மெய்ஞ்ஞான விளக்கவிரிவு முழுவதையுந் தம்முள் அடக்கியுள்ளன. முடிந்த முடிபான ஞான உண்மைகளை அடக்கியிருக்கும் சிவாகமம் வேதம் மற்றுமுள்ள சமயசாத்திரங்கள் என்பன ஐந்தெழுத்தாக உருப்பெற்றுள்ளன[2] என உமாபதிசிவம் கூறுகின்றார். இவ்வைந் தெழுத்தையும் ஆய்ந்தறிபவர்கள் உமாபதிசிவத்தின் கூற்றைத் தாமாக விளங்கிக்கொள்வர்.

பஞ்சாட்சரத்தில் உள்ள ஐந்தெழுத்தும் சிவன், ஆன்மாவைச் சிவனோடு சேர்க்கும் பராசக்தி, ஆன்மா, ஆன்மாவின் மல சக்தியைத் தேய்க்குந் திரோதானம், மலம் என்ற பொருள்களைக் குறித்து நிற்கின்றன. இவ்வாறு பஞ்சாட்சரம், கடவுள், சித்துப் பிரபஞ்சம், அசித்துப் பிரபஞ்சம் என்பவற்றை உள்ளடக்கியதாயிருக்கின்றது. தத்துவ முக்கியத்துவம் வாய்ந்தனவாக நாம் கருதக்கூடிய விஷயங்களில் ஒன்றுதானும் இதில் அடங்காமலில்லை. மலம், ஆணவம், மாயை, கன்மம் எனும் மூன்றையும் உள்ளடக்குகிறது. பஞ்சாட்சரம் தத்துவ உண்மைகள் எல்லாவற்றையும் உள்ளடக்கு மளவினன்றி

1. பஞ்ச = ஐந்து, அட்சரம் = எழுத்து
2. "அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தும்
பொருள்நூல் தெரியப் புகின்".

ஒவ்வொன்றுக்கி டையிலான அந்தரங்கத் தொடர்பு விளங்கத்தக் கதாகவும் அமைந்திருக்கிறது. ஆன்மாவின் பரிணாம முறையான முன்னேற்றம் அதன் கடந்த கால, நிகழ்கால, எதிர்கால நிலைமைகள் என்ற எல்லாம் பஞ்சாட்சரத்தின் தெளிவாகக் காட்டப்பட்டுள்ளன. இதன் அட்சரங்கள் ஐந்தும் இருவகைகளில் ஒழுங்குபடுத்தப் படலாம். இவ்விரண்டி லொன்றில் ஆணவத் தைச் சாய அமுக்கும் திரோதன சக்தியைக் குறிக்கும் எழுத்து முதலெழுத்தாகவும் மற்றையதில் சிவனைக் குறிக்கும் எழுத்து முதலெழுத்தாகவும் அமைகின்றன. உலகியல் நோக்கு மிக்காருக்கு உரியதாக முன்னையது கருதப்படுகிறது. அவர்கள் இதைத் தியானித்து வருவார்களாயின் உலகியல் நோக்குப்படி யாக விடப்பெற்றுத் தெய்விக நோக்குக் கைவரப் பெறுவார்கள். பிறகு அவர்கள் இரண்டாவது வகையான பஞ்சாட்சரத்தைத் தியானிக்கத் தகுதி பெற்றோர் ஆவர். இவ்விரண்டாவது வகைப் பஞ்சாட்சரம் தெய்விக நோக்குக் கைவந்தவர் சிவனுடன் ஏகனாந் தன்மை பெறச் செய்கிறது. அதனால், அது முக்தி பஞ்சாட்சரம் எனப்படுகிறது. இவ்விருவகைப் பஞ்சாட்சரத்திலும், சிவனைய டைந் துய்தல் விஷயம் நமக்கு எந்த ஓரளவுக்கு முக்கியமா யிருக்கிறது, நம்மைப்பற்றிய தற்போதைய நோக்கில் நாம் எவ்வளவுக்குத் தவறு பட்டுள்ளோம் என்பது பற்றிய விளக்கத்தை ஒரே பார்வையிற் காணுகின்றோம். அம்மட்டோ, உண்மையை நாடி உழலும் ஊக்கமின்றி இப்போதைக்கினிது போலிருக்கும் உலகியல் வாழ்க்கைச் சேற்றிற் கிடந்து புரள்வதில் எந்த அளவுக்கு உயர் திருப்தி யடைகிறோம். ஒளிமயமானதும், நம் மலநோயைக் குணப்படுத்த வல்லதும் நம்மிலும் ஊடுருவும் பண்புள்ளதுமாய் நம்மை யண்டிக் கிடக்குந் திருவரு ளூற்றை நாடுவதில் நாம் எவ்வளவுக்கு வேண்டா வெறுப்பா யிருக்கிறோம் என்பதையு மன்றோ காணவல்லவ ராகின்றோம். மேலும், நிலையற்றன வாயிருக்கும் பெறுமதியற்ற லௌகிகப் பொருள்க ளில் எந்த அளவுக்கு எல்லையற்ற மதிப்பு வைத்திருக்கிறோம்,



அதே வேளை அளவு முடிவற்ற உண்மைப் பொருள்களாகிய கடவுள், ஆன்மா என்பவற்றின் பேரில் எவ்வளவுக்கு அலட்சிய புத்தியுள்ளோரா யிருக்கிறோம் என்பதையுமே காண்கிறோம், நம்மைப் பற்றியிருக்கும் மலங்களின் வேறாகவும் சாதாரணமாகத் தானே நாமென்றினங் காண நிற்பதான ஆணவத்தின் வேறாகவும் ஆன்மா என்ற நமது இயல்பான உண்மைநிலை எது என்பதை யும் இப் பஞ்சாட்சரத்தில் வைத்தே அறிகிறோம். அன்றியும், நமது பூரண அன்புக்குப் பாத்திரராயுள்ளவர் சிவன். அவர் நமக் காக இருவேறு நிலைகளை மேற்கொள்ளும் தமது திருவருட் சக்தியை ஆன்மாவுக்கு (ய 'வுக்கு) வலப்பால் ஒன்றும்(வ), இடப்பா லொன்றும் (ந)மாக வைத்து இராப்பகலாக நமக்கு அன்பாதரவு செய்து நம்மைப் போஷித்துப் பாதுகாத்து வருகிறார். சக்திகள் இரண்டில் ஒன்று நம்மை வலுவற்றோராக்கும் மலத்தளைகளை அறுக்கின்றது. மற்றையது நாம் சிவமாந்தன்மை உற உதவுகிறது. இவ்வகையிற் பார்க்கையிற் பஞ்சாட்சரம் உண்மையிற் பெரும கிமை யுள்ளதாதல் பெறப்படும்.

பஞ்சாட்சரத் தியானம் அப்பஞ்சாட்சரத்தின் மகிமையை அறியுமளவில் அமைவதாகாது. இது சிவனின் ஒரு மூர்த்தம். மற்றுஞ் சிவ மூர்த்தங்களைப் போல் இதுவும் ஆன்மாவில் தாக் கம் ஏற்படுத்துகிறது. இதன் தாக்கத்தினால் ஆன்மாவில் நேரும் பிரதிபலன் மற்றும் மூர்த்திகளின் தாக்கத்தினால் நேரும் பிரதிபலனை ஒக்கும். தன்னளவில் இது ஒரு சத்தி - மந்திர சத்தி. மற்றெதனிலுமிருந்து இதற்குச் சக்தி பிறப்பதில்லை. மறுபக்கம் நோக்கின் மற்றும் மூர்த்தங்கள் தமது தெய்விகத் தன்மையைப் பஞ்சாட்சர நியாசத்தினாற் பெறுகின்றன. இதனுடன் நியாசஞ் செய்யப்படும் மற்றை மந்திரங்கள் இதன் உபகிரகங்கள் போல் வன. இம்மந்திரம், தன்னைத் தியானிப்பவர் ஆணவத்தின் குறுக்கீடுகளிலிருந்து தம்மைக் காத்துக் கொள்ள உதவுகிறது. மந்திரம் என்பதன் சொற்பொருள் தன்னைத் தியானிப்பவனைக் காப்பது என்றே ஆகும்.

அதிகமான மூர்த்தங்கள் தம்மை வழிபடுவோர் ஆணவ பந்தத்திலிருப்பதை அவர்க்கு விளக்குவன அல்லனவாக, இப்பஞ்சாட்சரம் தன்னைத் தியானிப்போர் பந்த நிலையிலிருக் குமாற்றை நேருக்கு நேர் காண வைக்கின்றது. பெத்தநிலை, சுத்தநிலை என்ற ஆன்மநிலை விளக்கம் முழுவதையும் இப்பஞ்சாட்சரம் நம் அறிவில் தாக்கம் விளையத்தக்கதாகவும் நம்பத் தகும் வகையிலும் தவறற்ற முறையில் தெளிவாகத் தருவதாகும். முத்தி பஞ்சாட்சரத்தைத் தியானிக்கும் ஒருவருக்கு அதனாற் போதிக்கப்படும் முதல் விஷயம் சிவனது எல்லையற்ற அன்பாகும். அது அப்பஞ்சாட்சரத்தின் இரண்டாவ தெழுத்தினாற் காட்டப்படுகிறது. அவர் சிவனையும் அவர் அன்பையும் வெவ்வேறாகக் காண்கிறார். அவர் கண்ணிற் படும் அடுத்த விஷயம் ஆன்மாவைக் குருடாக்கி விட்டிருக்கும் ஆணவத்தின் துஷ்டத்தனம். ஆனால், குருடு நீக்கும் கண் (சத்திர) வைத்தியர் தனக்கும் ஆணவத்துக்கும் இடையிலிருந்து கொண்டு கண்ணை மறைத்திருக்கும் காச படலத்தை மெதுவாக விலக்கிக் கொண்டிருப்பதைக் காண்பதில் ஆறுதலும் மகிழ்வும் பெறுகின் றார். (கண்) நோயாளியான தனக்கு இடப்பக்கம் நிற்கும் அன்பாதரவான வைத்தியத் தாதியையும் வலப்பக்கமாக நிற்கும் (சத்திர) வைத்தியரையும் இவ்விருவரை யும் நன்கொடைகளாக வழங்கி யிருக்கும் வள்ளலாகிய சிவனையும் ஒருசேரக் காணுங் காட்சி, தியானிப்பவரது உள்ளத்தை உருக்குவதனால் அவர் தமது அன்பு முழுவதையுஞ் சிவன் பேரிற் சொரிபவராகின்றார். தனக்கு அந்தரங்க நண்பன் போல் தன்னைப் பிரியாதிருந்து, அதுவே தான் என்று இவர் தன்னை இனங்காண வேண்டும் நிலையை ஆக்கியிருந்த ஆணவம் மிகக் கொடூரமான ஒரு துஷ்டன் என்பதையும் அப்போது காண்கின்றார். அவருக்கு ஈதொரு புதுக்காட்சி யாய் விட, மேல், அதன் எட்டுமெல்லைக் கப்பால், தான் விட்டு விலகிவிடத் தீர்மானித்துக் கொள்கிறார்.



பஞ்சாட்சரத் தியானத்தின் பேறாக அவருக்கு ஏற்படும் சிந்தனைகளில் இரண்டாவது சிந்தனை தன்னைச் சார்ந்த தத்துவங்களின் உண்மைப் பெறுமானம் பற்றியதாகும். மும்மலங்களுள் நேரடியாகத் தன்னைக் கவர்வதாயிருப்பது மாயை. தனதுடல் ஒரு மாயைப் படைப்பு. காட்சிப் பிரபஞ்சம், கருத்துப் பிரபஞ்சம் எனுமிரண்டும் மாயைப் படைப்புக்கள். ஆனால், மாயை அசித்தும் சடமுமாயுள்ளது. அதற்கெதிர், தான் சித்தும் உணர்வுடைப் பொருளும் ஆம். மாயைப் படைப்புக்கள் யாவும் தோன்றி மறையுமியல்பின. அவை மாறி மாறி வந்து வந்து போய்க் கொண்டிருக்கும். யுகமுடிவில் அனைத்தும் ஆதார மாயையிற் சென்றொடுங்கும். எனக்கண்டு அதற்கெதிர் தான் இத்தகைமைகளுக்குட்படாத மேலாந் தன்மை யுள்ளவராதலை உணருமளவில், இவற்றில் எதற்கும் இனி அடிமைப்படாதிருக்கு மளவுக்குத் தன் மனதைத் திடப்படுத்திக் கொள்கின்றார். குறித்தனவற்றிற் பலவற்றுக்கு அதுவரை காலமும் அவர் அடிமையா யிருந்துள்ளவர். தனக்குப் பிரீதியான உணர்வுகளுக்கு மட்டுமல்ல; பிரியமற்ற உணர்வுகளுக்கும் நிர்ப்பந்தவகையால் அடிமையாகவே யிருந்தவர். புகையிலை பிரீதிகரமற்ற ஒரு சுவையுள்ளது. இருந்தும் புகையிலைக்கு அடிமையாவோர் உளர்.[3] அபின் சுவையும் கெட்ட சுவையே. அது புகையிலையினும் பார்க்கப் பெருந்தீங்கு விளைத்தற்குரியது. அபினுண்பவன் அதற்கு மீளா அடிமை யாகிறான். அபினைப் பெற்று அதனடிமைகளுக்கு வழங்குந் தொழிலால் இலட்சாதிபதி களாவோரும் உளர். பஞ்சாட்சரத்தைத் தியானிப்பவர் தீங்கான இம்மாயைப்படைப்புக்களை மட்டுங் கைவிடத் துணிபவராகார். நல்லனவான அதன் படைப்புக்களை யுமே ஒருங்கு கைவிட்டு விடுவார். அவர் வயிற்றுப் பசி தணிக்க உண்பவரே அன்றி நாச்சுவை யுணர்ச்சிக் குண்பவ ராகார். உடம்பைப் பாதுகாக்கு

3.வேறுவித அநுபவங்களுக்காக

மத்தனைக்கே உடையணிபவரன்றி ஆடம்பரத்துக்காக அணிபவராகார். மாயைப் படைப்புக்களில் தம் உடல்வாழ்வுக்கு மிக இன்றிய மையாத வற்றை மட்டுமே உபயோகிப்பவராவார். ஏனைப் பொருட்பற்று நிகழவே இடங் கொடார். செல்வம், அதிகாரம், பாலியலுறவு பற்றிய எவ்வித ஆசைக்கும் அடிமையாய் விடத் தன்னை அநுமதிக்க மாட்டார். வாழுமியல் புள்ளதும் என்றும் நிலைத்திருப்பதும் உள்பொருளு மான ஆன்மா, வாழுமியல்பற்றதும், சடமும், நிலையில்லாததும் உள்பொருளுமல்லா ததுமான மாயைப் படைப்புக்கு அடிமை யாவ தென்பது வேண்டப்படா ஒன்றே. அவர் இம்மாயைப் படைப்பை வெறுப் பாரென்பதினும் அதன்பாற் கவனஞ் செலுத்தா திருப்பாரெனல் மேல். இவைகள் 'அசித்' ஆக இருக்க அவர் 'சித்'தாக உள்ளார் என்பது கவனிக்கத் தகும்.

மறுநோக்கில், பஞ்சாட்சரத் தியானத்தின்போது ஒருவர், சகலவித அசைவுகளுக்கும், ஆற்றல்களுக்கும், ஊற்றுக் கண்ணாகவும் தன் முன்னிலையில் இவர் தன்னை ஒன்றும் போதாப் பொருளாக உணரவைக்கு மளவுக்கு முடிவிலா முதலாகவும் சிவனை இவர் காண்கின்றார். சிவன் இவரைத் தன்போல் சித்தாக என்றும் நிலைக்கும் பொருளாக்கும் நோக்கில் இவருக்கு (ய) இருபக்கமும் தனது அன்பு விகாரங்களாகிய பராசக்தி ஆதிசக்தி எனும் இரண்டையும் வைத்து ஞானவிளக்க மூட்டி ஆணவத் தளையறுத்து இவர் தன்மையால் தன்னுடன் ஒன்றாம் இன்பப் பேற்றை அருளும் பொருட்டு இவர்மேல் எல்லையற்ற கருணையைச் சொரிந்து கொண்டிருக்கும் பேருபகாரத்தையும் துடியாக உணர்கின்றார். ஆணவத்தோடத்து விதமாம் உறவு சிவனோ டத்துவிதமாம் உறவு எனுமிரண்டில் எது கொள்ளத் தக்கதெனத் தேர்ந்து கொள்ள வேண்டுபவரும் ஆகின்றார். இத்தியானத்தில் அழுந்தி யிருப்பார்க்கு அதனாற்றலால், 'நம' எனும் ஒரு பக்கக் கவர்ச்சி நிர்மூலமாக்கப் பட்டொழிதலால் தியானிப்பவர்க்கு மேற்கண்ட வாறாகத் தேர்ந்து



கொள்ளும் அவகாசமும் அற்றொழியும். அவருக்கு ஒருபக்கக் கவர்ச்சி மட்டுமே. அதாவது அவர் செல்நெறி ஒன்றே உளதாதலின் ('நம' நெறியைப் புறக்கணித்து) 'சிவ'நெறியிலேயே நேராகச் சென்று சிவன் திருவடிப் பேறெய்துகின்றார்.

இங்ஙனம், பஞ்சாட்சரத் தியானம் ஒரு ஞான விளக்கமும் ஒரு சமயமும், ஒரு வாழ்க்கை வழியும் நல்குவதாயுள்ளது. இவ்வாழ்க்கை வழி தியானத்தை முக்தியாகிய பெரும்பேரிலக் குக்கு மிக அண்மையானதாக்குகின்றது. ஆனால், இவ்வகையில் தியானிப்பவர் வாழ்ந்து கொண்டிருக்கும் வாழ்க்கை வழியும் அவர் சந்திக்கும் ஏனையர் வாழ்க்கை வழியும் பஞ்சாட்சரத்தினாற் குறிப்பிடப்படும் இருவழிகளுமாய் நேருக்கு நேர் முரண்படு வனவாம். கால வசத்தாலான தவறான பழக்கங்கள் அவர்க்குப் பஞ்சாட்சரத் தால் வழங்கப்பெற்ற மகிமைக்குரிய குறிக்கோள் களைச் சிதைத்துவிடும் பயங்கரமான தாக்கமுள்ளனவாயிருக்கும். தனதும் தனது சூழ்நிலை சார்பானவுமான பழக்கங்களின் எதிர்த்தாக்குதலுக்கு நின்று பிடிக்கும்படியாக அவர் ஒரே தடவையில் பஞ்சாட்சரத்தை நூற்றெட்டுருச் செபிக்க வேண்டிய வராகிறார். மந்திரத்தை உருவேற்றல் செபம் என்றும் நினைத்தல் தியானம் என்றும் கூறப்படும். சரியான உணர்வு பூர்வமாக இவை மேற்கொள்ளப்படின் தியானிப்பவர் வாழ்க்கை சார்ந்த தமது முன்னைய நோக்குக்களை மெல்ல மெல்ல அழிக்கக்கூடிய வராவர். அழித்து, அவற்றினிடத்தில் பஞ்சாட்சரம் அறிவித்த விழுமியங்களைப் பதித்துத் தன்னிலக்கை அணுகும் நடையில் கணிசமான அளவு முன்னேற்றம் பெறுபவரு மாவர். இவ்வுலக வாழ்விலும் தான் சித்தியுற்றதாகவும் அளவுக்கு மிஞ்சின மகிழ்ச்சி யுற்றதாகவும் அவர் கண்டு கொள்வர்.

நமது சமயாசாரியர் எல்லோரும் பஞ்சாட்சரம் பற்றிப் பாடியிருக்கிறார்கள். அதைப் புகழ்ந்து பாடப்பெற்ற திருஞான சம்பந்தர் பதிகங்கள் இரண்டு. அப்பருஞ் சுந்தரரும்அதுபற்றி ஒவ்வோர் பதிகம் பாடியுள்ளனர். மாணிக்கவாசகர் தமது

திருவாசகத்தில் இதற்கு முதலிடங் கொடுத்துள்ளார். 'நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாஆழ்க' என்பது அவர் முதல் வாக்கு. மற்றோரிடத்தில், இது சம்சாரக் கடலைக் கடந்து சிவலோகத்தில் அல்லது சிவன் திருவடிகளிற் சேர்தற்குரிய தெப்பம் எனக் குறிப்பிட்டிருக்கின்றார். 'அஞ்செழுத்தின் புணை பிடித்துக் கிடக்கின்றேனை - முனைவனே முதலந்தமில்லா மல்லற் கரைகாட்டி யாட்கொண்டாய்' - என்பது காண்க. காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார் தமை (ஞானநெறியாகிய) நன்னெறிக்குய்ப்பது வேதம் நான்கினும் (நான்கினதும்) மெய்ப்பொருளாவது' - பஞ்சாட்சரமே[4(1)] என அருளியுள்ளார் திருஞானசம்பந்தர். விழித்திருப்பினுஞ் சரி உறங்கினுஞ் சரி எல்லா வேளையும் பஞ்சாட்சரம்[4(2)] இடையீடின்றித் தியானிக்கப் படுவதையும் அவர் வலுவுறுத்தி யுள்ளார். வேறு பராக்குகளில் ஈடுபட்டிருக்கையிற் கூடப்[4(3)] பஞ்சாட்சரம் இடைவி டாது செபிக்கப்பட வேண்டுமெனச் சுந்தரரும் வலுயுறுத்தியுள்ளார். செபிக்கபடும் ஒலி வேறுபாட்டைப் பொறுத்துப் பஞ்சாட்சர செபம் மூவகைப்படும். முதலாவது வகை கிட்ட நெருங்கி நிற்கக் கூடுவோர் மட்டுங் கேட்குமளவுக்கு ஒலிப்பதாயிருக்கும். இரண்

4(1). "காதலாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதநான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாத னாமம் நமச்சி வாயவே"

4(2) "துஞ்சலுந் துஞ்ச லிலாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமி னாடொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்த கூற்
றஞ்ச வுதைத்தன வஞ்செ ழுத்துமே"

4 (3) மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப்
பாத மேமனம் பாவித்தேன்
பெற்ற லும்பிறந் தேனி னிப்பிற
வாத தன்மைவந் தெய்தினேன்
கற்ற வர்தொழு தேத்துஞ் சீர்கறை
யூரிற் பாண்டிக்கொ டுமுடி
நற்ற வாவுனை நான்ம றக்கினுஞ்
சொல்லு நாநமச் சிவாயவே.



டாவது செபிப்பவர் செவிகளுக்கு மட்டுங் கேட்பதாகும். மூன்றாவது வகை செபிப்பவர்க்குங் கேளாநிலையின தாகும். இம் மூன்றாவது வகைச் செபித்தலில் நாப் புடைபெயர்தல் நேராது. இவ்வகையான செபமே மற்றைய இருவகையிலும் பார்க்க ஆற்றல் வாய்ந்த தென்பர். நாம் வேறு பராக்குகளில் ஈடுபட்டிருக்கையிலுங் கையாளக்கூடிய செபமுறை இதுவேயாம்.

தவறு புரியுஞ் சகல பழக்கங்களையுந் தகித்து[5] விடக் கூடியது பஞ்சாட்சரம் என்பர் அப்பர் சுவாமிகள். கொலை யாளிகள், இழிதொழிலாளர்களையுந்[6] திருத்தவல்லது பஞ்சாட்சர மென மேலுங் கூறுவர் சம்பந்த சுவாமிகள். வாழ்க்கை அநுபவங் களும் பஞ்சாட்சரத்தின்ஆற்றல் வலுவுக்குப் போதிய அத்தாட்சியாயுள்ளன. உள்ளத் தூண்டுதல் எதையாவது நீ எதிர்க்க வேண்டினும், பிரீதிகரமாகாத உணர்வுகளிலிருந்து உன்னை நீயே விடுவித்துக் கொள்ள வேண்டினும் பஞ்சாட் சரத்துக்கு விண்ணப்பித்தால் (அதைச் செபித்தால்) அது உன்னைத் துன்பகரமான சூழ்நிலையிலிருந்து காப்பாற்றும்.

5. "விண்ணுற வடுக்கிய வியகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை ஒன்று மில்லையாம்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சிவாயவே."

6. "கொல்வா ரேனுங் குணம்பல நன்மைக
ளில்லா ரேனு மியம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையு நீக்குவ ரென்பரால்
நல்லார் நாம நமச்சி வாயவே."



## அத்தியாயம் ஏழு
# சைவ வாழ்க்கை

சைவசமயி என்பவர் பரம்பொருளான சிவனை வழிபடுபவர். ஆகையால், அவர் தன் வழிபடு கடவுளாகிய சிவனது மகிமைக்கு ஒத்திணக்கமாகிய முறையில் தன் வாழ்க்கையை நடத்த வேண்டியவராகிறார். அவராற் பேணப் படவேண்டிய கௌரவம் ஒன்றுண்டு. அப்பர் சுவாமிகள் தமது திருப்பாடலொன்றில்[1] சைவவாழ்க்கையைப் பற்றிய பூரண விளக்கந் தந்திருக்கிறார். எவரொருவருக்காவது (எசமான்) விசுவாசம் பண்ணுங் கடப்பாடு நமக்கில்லை. நாம் மரணத்துக்கு அஞ்சுவோரும் ஆகோம். நரகத் துன்பத்துக் காளாம் நிலையிலிருந்து விடுபட்டுள்ளோம் நாம். கபட நாடகம் பண்ணல் எமக்கு அந்நியமானது. சுய கௌரவம் உடையோர் நாம். நோய் என்பதை நாமறியோம். உலகவர் எவர்க்கும் தலைவணங்கோம் நாம். எமக்கு எப்போதும் இன்பமே. துன்பமென்பது எமக்கு கில்லை. திருச்செவியிற் சங்கக் குழை திகழ இருப்பவரும் யாரொருவர்க்கும் குடிமை பூணாதவரும் எமக்கு எல்லாநலன் களும் தாமாகவே அறிந்து நல்க இருப்பவரும் ஆன சிவபெருமானுக்கு நிரந்தர பணியாளராயுள்ளோம் நாம். நாம் சங்கரனுக்கு (ஆனந்தங் கொடுப்பவர்) நிரந்தர பணியாளர் ஆதலால் நாம் மற்றெவரிடமிருந்தும் பணிபெறுபவராக முடியாது. வாழுந் தகைமையிழந்த உடலிலிருந்து உயிர் விடுதலைபெற வருவதே மரணம். ஆதலால், அதற்கு அஞ்சு வதைவிட அதை வரவேற்க நாம் தயார். நாம் சிவனுக்கு நேர்மை

1. "நாமார்க்குங் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்திலிடர் படோம், நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச் சே வடியிணையே குறுகினோமே."



யாகப் பணிவோம். ஆகையால், தவறான செயற்பேறான நரக வேதனையுட் பட்ட சகல துன்பங்களிலிருந்தும் விடுபட்டுள் ளோம். சிவன் பணியாளர் என்ற முறையில் உலகில் உயர்ந்த ஸ்தானம் வகிப்பவரும் நாமே. மற்றெவ்வுயர் பதவி நிலையும் நாமிருக்கும் நிலைக்குக் கீழானதே. ஆகையால் நமக்குத் தகாத கபடநாடகம் மேற்கொள்ளுந் தேவை எமக்கில்லையாகும். சிவன் பணியாளர் என்ற முறையில் எமது உயர்நிலைக்குப் பொருந்த வராத எதற்கும் நாம் இணங்க வேண்டியவராகோம். கர்ம பந்தத்திலிருந்து எம்மை விடுவித்தற் பொருட்டு நமக்கு நேரும் ஒவ்வோர் அநுபவத்தையும் மகிழ்ச்சியோடு வரவேற்போம். ஆதலால், துன்பங்கூட நமக்கு இன்பத்தின் ஊற்றாகும். உலகவர் எவ்வளவுதான் பலம் மிக்கவராய் அதிகாரவீ றுடையராய் இருப்பினும் அவர்களுக்கு நாம் தலைவணங்கோம். அத்தகையவராயுள்ள மேலுலகத் தேவர்களுக்குமே நாம் பணியோம். அவர்கள் அனைவருந் தான் சிவனுக்குப் பணியா ளராந் தகைமை பெற்றுள்ளவர் நிலைக்குத் தாழ்ந்த நிலையிலுள்ளோர் என்பதே எமது கருதுநிலை. தெய்வத் தியானம், இன்பற்ற நிலைக்குச் சற்றும் இடங்கொடுக்காததும், இடையீடற்றதுமான பேரின்பத்தை நமக்குத் தருகின்றது. சிவன் பணியாளராயிரப்பதைவிட மேலான நிலையாக இங்கு எதுவுமே யில்லை. ஆதலால், நாம் தேடிப் பெறுதற்கென்று கவனஞ் செலுத்துதற்கு உரியது வேறு யாதுமில்லை. உலகியல் உயர்பதவியாக ஏதேனுங் கொடுக்கப்படும் பட்சத்தில் நாம் அதனை மறுப்போம் என்பது அப்பர் திருவுளம். 'இந்திரன், விஷ்ணு, பிரமா என்போரால் வகிக்கப்படும் பதவிகளையும் நான் மறுப்பேன்' என்கிறார் மாணிக்கவாசக சுவாமிகள்.[2]

நாம் கோபங் கொள்ளுதற்கோ பயமடைதற்கோ துன்புறுதற்கோ நியாய ரீதியான காரணம் ஏதுமில்லை. எமக்குச் சார்பாக சிவன் கருணை எல்லையற்ற அளவிலுள்ளது.

2. கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு

உலகில் இடம்பெறுவதொவ் வொன்றும் சிவனது அன்பின் மயமான விதியின் பேறாக நிகழ்வன. ஆகையால் எமக்கு எது நிகழினும் அது சிவன் நம்பாற் சொரியும் அன்பிலிருந்து தொடர்வதாகவே யிருக்கும். இதிலிருந்து எமக்கு நேரும் ஒவ்வொன்றும் நமது நன்மைக்கே எனல் புலனாம். ஆகவே, நாம் அஞ்சுவதற் காந் தருணம் எதுவும் இருக்க முடியாது. நாம் துயருறுதற்கோ கோபங் கொள்ளுதற்கோ ஆந் தருணங்களும் இருக்க முடியாதனவே. கடவுள் விதியை விளங்கா திருக்கும் நமது அறியாமையினால் குறித்த உணர்வு நிலைகளுக்காளாகி மாய்கின்றோம். நமது மடமையால் உண்மையில் நம் நன்மைக்குரிய தொன்று வரினுங் கூட அதையிட்டு அஞ்சுகிறோம். அது வந்து சேர்ந்ததும் பயப்படு கிறோம். நம்மையிட்டு மற்றவர்கள் அபிப்பிராயம் என்ன என்பதைப் பற்றி நாம் மதிப்பிடுவதில்லை. கடவுள் விதிக்கிணங்க நம்மை நாம் பரிசோதிக்க வேண்டும். நீ நல்லவனாயிருக்கிறாய் என்று நாம் எமக்கே சொல்லக்கூடும் நிலை யிருக்குமானால் நாம் உண்மையில் எம்மைப்பற்றித் திருப்தியுற்றிரப்பவராவோம். ஆனால், அப்படியொரு மதிப்பீடு செய்வதை விடக் கஷ்டமான ஒன்று வேறிருக்க முடியாது. அப்பர் சுவாமிகள் தன் விஷயத்தில் அநுகூலமான ஒரு மதிப்பீடு செய்ய முடியாதிருந்துள்ளார்.3 ஆகையால் பண்பாடற்ற நம் போல்வார் நம்மைப்பற்றி அநுகூலமான மதிப்பீடு செய்தல் அசம்பா விதமாகும். ஆனால், நேற்றிருந்ததிலும் பார்க்க இன்று நன்னிலையிலுள்ளோம் என்று சொல்லக் கூடியவர்களாதல் நமக்கு அசம்பாவிதமாகாது. நீ ஒரு நேர்மையாளனாக இருக்கிறாய் என்று நான் எனக்குச் சொல்லிக் கொள்ள இயலாத நிலை இருக்குமானால் மற்றவர்கள் என்மேற் கூறும் புகழ்ச்சியை மறக்க வேண்டியது என் கடமையாகும். அவர்கள் என்னைப் புகழின் அவர்கள் என்னைப்பற்றித் தவறாகக் கருதி விட்டார்கள் என்பதே அர்த்தமாகும். இதிலிருந்து,

3. குலம் பொல்லேன் குணம் பொல்லேன் குறியும் பொல்லேன்.



மற்றவர்களின் புகழ்ச்சியைப் பெற நாம் முயல்வது மடமையுள் மடமையாகும் எனல் போதரும். புகழ் என்பது பொய். அது அறியாமையின் விளைவு.

உண்மையான சைவ சமயியின் வாழ்க்கை இலட்சியப் பாங்கானது. அவர் தன்னால் எவ்வகைத் தவறும் நிகழுஞ் சார்பை எதிர்ப்பதற்காம் பூரணமான பலத்துடனிருப்பார். அத்துடன் சரியானவற்றை யேசெய்வதற்கான அறிவுணர்களை நிரம்பக் கொண்டிருப்பார்.அவர் அணியுந் திருநீறு சிவன் கருணையாகிய பராசக்தியாயிருக்கும் அவருக்கு. புலப்படக் கூடிய அளவு தன்னிடம் சிவ அன்பு பிரகாசிக்கத் தோன்றுமவர் ஏனை உயிர்களிடத்தும் அன்புகொள்பவரா யிருப்பார். தன்னை முழுவதாகக் கடவுளுக்கு ஒப்படைக்கும் பண்பினதாக அவர் புரிந்து வரும் வழிபாட்டின் மகிமை கடவுள் விதிக்குப் புறம்பாக உள்ள எதிலும் ஈடுபட அவரை அநுமதிக்காது. சிவனது அருள்விதி யானது தன்னை முற்றாக அடிமை கொள்ளலாம், வேண்டுமானால் அறுதியாக விற்றுக் கொள்ளலாம் அல்லது ஒற்றி4 வைக்க லாம் என அருளிச் செய்கின்றார் மாணிக்கவாசக சுவாமிகள். ஆகையால் இந்நிலையில் அவர் சிவன் அருள் விதிக்கு மாறுபாடாக நடந்து கொள்ள இயலாது. ஆன்மாவான தனது உண்மை நிலை என்ன என்பதைப் பஞ்சாட்சரம் அவருக் குணத்துகிறது. அவரறிவைக் குருடாக்கும் ஆணவம் அவருக்கு ஒரு பக்கம் குருடாந் தன்மையை நீக்கிப் பார்வை வழங்குதல் மட்டிலன்றிச் சாதாரண ஒளிக்குப் புலப்படாத நுண் பொருள் திறங்களையெல்லாம் தெளிவாக உணர்த்தும் சிவஞான விளக்கத்தையுங் கொடுத்துதவும் சத்திர வைத்தியர் மறுபக்கம். இதன் சார்பில், தன்னைக் குருடாக்குவாரை விட்டுத் தனக்கு ஞான விளக்கமும் மேலதிகமாகத் தரும் உபாயத்தை அவர்

4. 'இருந்தென்னை ஆண்டுகொள், விற்றுக் கொள், ஒற்றிவை'

ஒற்றிவையென்பது குறிப்பிட்டகால எல்லையில் மீட்கப்படுவதற்கான நிபந்தனையோடு கூடிய ஒருவகை விற்பனையாகும்.

இலகுவிற் கண்டு கொள்பவராகின்றார். அவரது கடவுள் வழிபாடுஅவர்க்கு இப்படியான பாடத்தைப் புகட்டிச் சரியான தையே தழுவி யொழுகும் அவரது ஆற்றலை இருமடியாக் குகிறது.மேலும் இதன் விபரங் காணில், உண்மையான சைவசமயி உண்பது உடலைக் கொழுக்க வைக்கும் நோக்கி லன்று, சிவப்பணி செய்வதற்கு வேண்டும் வலுவை உடலுக்கு ஊட்டுவ தற்கே. அவர்தம் செயல் அனைத்தையும் சிவப் பணியா கவே செய்வார். அவர் சாதாரண முயற்சிகளில் ஈடுபட்டி ருக்கையிலும் அவர் வாயிதழ்கள் சிவநாம செபத்திலேயே ஈடுபட்டிருக்கும். எல்லா வேளையிலும் பஞ்சாட்சர செபத்தில் ஈடுபடுவதை அவர் குறியாகக் கொண்டிருக்கக் காணப்படுவார். அத்தகையாரொருவர் ஒருநாள் தன்மனைவி அரிசி தீட்டிக் கொண்டிருக்கையில் உலக்கை போடும் ஒவ்வோர் தடவையும் 'சிவ' என்றுச்சரிக்கும்படி பணித்ததிலிருந்து இது அநுமானிக் கப்படும். தொழிலும் வழிபாடும் ஒத்தியலவேண்டும் என்பது அவர் வாழ்க்கை விதியா யிருக்கும். பெரியபுராண நாயன்மாருள் மட்பாண்டம் வனையுங் குலத்தினராய ஒருவர் வனைதற் பொழுது முழுவதும் வழிபாடும் உடன் நிகழ்த்தி வந்துள்ளார். அவ்வளவிலும் அவர்பாடு முடிந்தபாடில்லை. சிவனடியார்களில் வேண்டு வோர்க்கு இலவசமாக மண்ணோடு வழங்குவதையும் அவர் வழிபாடாகவே கொண்டிருந்தார்.

இனி, பேரளவிற் சைவர் என்றிருக்கும் நம் போல்வார் பற்றிக் கவனிப்பாம். நாமும் கடுமையாக முயன்றால்தான் நம்நிலையை முன்னேற்ற முடியும். நமது வழிபாடு பின்வரும் மூவகைகளில் ஒன்றை மேற்கொள்வதாயிருக்கும். முதலாவது வகை பெரும்பாலும் இயந்திர இயக்கம்[5] போல்வது. பெரும்பா லான நம்மவர் நிலையிதுவே. அதன்கண் விபூதி அணிதல் பஞ்சாட்சரம் உச்சரித்தல் என்ற நமது சமயப் பெருங் கொடைகள் மட்டும் விரும்பத்தகுமளவு நலனளிப்பன வாகா. ஆனால்,

5. உணர்வு தொழிற் படாமல் நிகழ்வது.



நல்லதொன்று விரும்பத்தகுமளவுக் கில்லாததாயினும் என்றேனும் அவமதிக்கப்படலாகாது என்பது சற்றுத் திருப்தி கரமாம். இரண்டாவது வகையான வழிபாட்டில் வழிபடுபவரின் புத்தியானது குறித்த சாதனைகளின் விசேட முக்கியத்தவம் உள்ளுட்டம் என்பவற்றைச் சார்ந்துநின்று வழிபடுபவர் தன் போக்கில் திருந்தி முன்னேற உதவும். இது மட்டரக மானவலுவுள்ள இச்சைகளைச் சமாளிக்குமாயினும் வலுமிக்க இச்சைகளாற் கீழறுக்கப்படும். மூன்றாவது வகையில் உணர்வுகளும் தோற்றமளிக்கும். அவ்வுணர்வுகள் ஆற்றல் சாவிகளாய், புரட்சிகரமான வலிய இச்சைகளையும் கீழ்ப்படுத் தவல்லனவாம். புத்தியுடனும் உணர்வுகளுடனும் கூடிய வழிபாடே எங்களைத் திருத்தி உண்மையான சைவ நிலையை அணுகவைக்கும்.



## அத்தியாயம் எட்டு
# பொது மக்கள் சைவம்

சைவ சாஸ்திரங்களின் பொருள்விளக்கம் பற்றிய சிந்தனை எதுவுமற்ற சைவசமூகத்துச் சாமானியரின் சமயம் பொது மக்கள் சைவமாகும். அவர்களின் சமய அறிவு புராணக் கதைகளும் தம்மத்தியில் நிலவும் சமய நம்பிக்கைகளுஞ் சார்ந்த அளவினதாகவே யிருக்கும். அவர்கள் சிவன், தேவதைகள், மனிதர், இராட்சதர், பேய்கள் எனும் எல்லாவற்றையும் வழிபடுவோராவர். அவருட்பலர் திருநீறணிவர்; ஆலய வழிபா டாற்றுவர். விரதங்களனுட்டிப்பர். அவர்களுக்குக் கடவுள் பற்றிய கருத்து, படைத்தற் கடவுளாகிய சிவன் முதல் கடவுட் பொம்மைகள்வரை பல இலக்குகளிற் பற்றியிருக்கும், இவருள் அநேகர் உலகியல் வாழ்க்கை நிகழ்வுகள் தமது மண்டை யோட்டில் எழுதப்பட்டபடி நடப்பன எனக் கருதுகிறார்கள். மரணத்தின் பின் பிறப்புண்டென அவர்கள் நம்புகிறார்கள். அது காரணமாக, மரணத்துக்குப் பின் நடந்தாக வேண்டுங் கிரியைகளில் ஆவலுள்ளோராயிருக்கின்றனர். பல்வேறு சகுனங்கள் நிமித்தங்கள், பல்லி சொல்லுதல் என்பவற்றில் நம்பிக்கை கொண்டுள்ளார்கள். பல்லி சொல்லுதல் கேட்டு மிக இன்றியமையாத அலுவல்கள் கூட அவர்களாற் கைவிடப்படு கின்றன. அவர்கள் சோதிட சாஸ்திர பக்தர்களாயிருந்து எல்லை யற்ற துன்பங்களுக்கும் ஆளாகின்றார்கள்.

இவ்வித சாமானிய சைவர்களின் அதிர்ஷ்டக்கேடு யாதெனில் அவர்கள் சைவவியலை அறியா திருப்பதாகும். தன்போல்வார் சொல்வதையுஞ் செய்வதையுமே தானுங் கடைப்பிடிப்பதாகச் சொல்லுபவன் மந்தைச் சுபாவமுள்ளவன்.'' புதிது ஒவ்வொன்றாலும் அவன் ஈர்க்கப்படுகிறான். தவற்றி லிருந்து சரியைப் பிரித்தறிய உகந்தவழி எதுவும் அவனறியான்.

தமிழகத்தில் வெவ்வேறான இரு சமயங்கள் ஒரு காலத்தில் இருந்தன. கலாச்சார பண்பாடுள்ளோரால் தழுவப்பட்ட



சைவம் அவற்றில் ஒன்று. மனித வழிபாடும் பசாசு வழிபாடும் இணைந்த ஒன்று மற்றையதாகும். அண்ணமார், நாச்சிமார் என்போர் சமூகத்தில் உயர்தரத்திலிருந்த மனிதர். அவர்கள் வாழுங்காலத்தில் அவர்கள் ஆதிக்கத்திலிருந்தோராற் போற்றப் பட்டு மரித்தபின் தெய்வ பாவனையில் வழிபடப் பெற்றவர்கள். காத்தவராயர் அசுரனாயிருந்த ஒருவர். மாடன், கறுப்பன், பெரிய தம்பிரான் என்போர் பசாசுகள். பண்பாடுறாத மக்கட் குழுவின ரால் வழிபடப் பெறும் வைரவர் ஒரு படைப்பு. காளி என்ற வடிவும் இவர்களால் வழிபடப் படுகின்றது. இவையாவுஞ் சைவ எல்லைக்குப் புறம்பானவை. காலகதியில் இவ்விருவகை யினரும் ஒன்றிக் கலந்து விட்டனர். அதன் விளைவாக பண் பாட்டு மலர்ச்சி யுள்ளார் தொகுதியில் அறிவினராயிருக்க நேர்ந்துள்ளோரும் பண்பாடற்றோர் தொகுதியில் அதிர்ஷ்டமுள் ளோரும் (இதாகிதமறியாது) சிவ வழிபாடு , மனித வழிபாடு எல்லாம் நிகழ்த்துவாராயினர்.

இத்தகையினரால் வழிபடப்படும் மூன்று இன்றுமுள. அவற்றுள் ஒன்று மேரி. வட இலங்கையில் உரோமன் கத்தோ லிக்கராற் புனிதத் தலமெனக் கருதப்படும் மடுமாதா கோயிலில் உள்ளது அது. மற்றையது, இஸ்லாமியரின் பெருமதிப்புக்குள்ளா யிருக்கும் மீரா. இது தென்கிழக்கிந்தியாவில் நாகூரில் உள்ளது. அவற்றில் நிகழும் வழிபாடு சொல்வார் சொல்வழிப் பிறந்த நம்பிக்கையிற் கால் கொண்டது. அதன் விருத்தி பணம் பெருக் கும் ஆர்வ விருத்தியை உட்கொண்டது. அதுவே, அவ்விடங் களில் நிகழும் வழிபாட்டின் இலக்கணமுமாம். சைவ சமயத்தவ ரொருவர் நோய்ப்பட்டிருக்கையில், குறித்த தலங்களிரண்டில் ஒன்றுக்கு அன்பு பூண்டிருந்த உறவினரொ ருவர், நோய் தீர்ந்து குணமடைந்ததற்காகக் குறித்த அத்தலத் துக்கு நன்கொடையளிப் பதாக நேர்த்தி பண்ணும்படி நோயாளிக்கு ஆலோசனை கூறுவார். நோயாளியும் அங்குபல அதிசயங்கள் நிகழ்ந்ததாகப் புனையப்பட்ட செய்திகளை முன்பு கேட்டிருந் தவராதலின், ஆலோசனைக்கியைந்து நேர்த்தி பண்ணிக் கொள்கின்றார்.

நோய் தீர்ந்ததும் தனது சுற்றமித்திரர் சகிதம் அவர் அத்தலத்துக்கு யாத்திரை பண்ணுகிறார். சுற்ற மித்திரரும் தம்மவர் ஒருவர் நோய்வாய்ப்படும்போது அத்தலத்து மகிமையை மனங் கொள்கின்றனர். உண்மையில் இது சார்பான நிகழ்தகவு யாதெனில் :- மனிதனொருவன் தன் வாழ்நாளில் பட்டுத் தரிக்கவுள்ள பலவேறு நோய்களில் மரணம் விளைக்கும் இறுதி நோய் தவிர மற்றெல்லாவற்றிலிருந்தும் மீளுவது சகஜம். ஆகையால், அத்தெய்வங்களுக்கு நோயாளி எவ்வித நேர்த்தியுஞ் செய்யாதிருப்பினுங் கூட அவன் நோயிலிருந்து மீட்சி பெற்றேயிருப்பான் - என்பதாம்.

சைவத்துக்குப் புறம்பானதாயுள்ள மூன்றாவதான ஒன்றின் வழிபாடு பழைய சிங்கள மன்னன் ஒருவனால் இலங்கை முழுவதிலும் அதிகாரபூர்வமாக விதிக்கப்பட்டிருக்கிறது. அது கண்ணகி எனப்படும். அக்கண்ணகி பிரதிஷ்டை செய்யப்பட்ட கோயில்களில் நமது சமயத்தவர்கள் பூசாரிகளாக வந்திருக்காத பட்சத்தில் அவ்வழிபாட்டை விதித்த மன்னன் இறந்த கையோடே அவ்வழிபாடு கைவிடப்பட்டிருக்கும். கண்ணகியின் தெய்வத் தன்மை பற்றிய நம்பிக்கை சரித்திரம் எழுதுவோராற் புனையப் பெற்ற பொய்க்கதை மூலம் மேலும் அதிகரிப்பதாயிற்று. கண்ணகி தேவதை யொன்றின் அவதாரமென்பது அப்பொய். கண்ணகி வரலாற்றை அதன் நூலாகிய சிலப்பதிகாரத்தில் வாசிப்போர் அவள்பற்றிய அவதாரப் புனைவை ஒத்துக்கொண் டாக வேண்டு மெனற்கில்லை.

கண்ணகி, தன் கணவனுக்கு அரசன் கொலைத் தண்டனை விதித்தது அநீதியென அவனெதிரில் நிரூபித்தபோது, அரசன் அநீதியை இழைத்துவிட்ட தன் தவற்றுக்காக வருந்தி மூர்ச்சித்து அக்கணமே உயிர் விட்டான் என்பது சிலப்பதிகாரச் செய்தி. மற்றெவ்வரசனாவது தான் அநீதி இழைத்துவிட்டமை மாத்திரத்திற்காகத் தானாக உயிரிழந்த செய்தி மற்றைச் சரித்திரத்திலேனுங் கதையிலேனுங் காணப்பட்டதில்லை.



நீதி வளாகத்தில் அவன் அரசர்க்கரசனாவான். எனது வாசகரே! நீர் கண்ணகியா யிருந்திருந்தால், உமது கணவன் விஷயத்தில் அநீதியாளனாக இருந்துவிட்ட ஒரே ஒரு சிந்தனைத் துயர் தாங்கமாட்டாமல் ஒரு அரசன் தானாக உயிரிழப்பதை நீர் காணுகையில் உமது உணர்ச்சி என்னவாயிருந்திருக்கும்! பெருந்தன்மை வாய்ந்த அந்த அரசனது பிணம் உம்முன் கிடக்கிறது. அதனை உம்முன் காணும்போது உமது உள்ளத்தில் எத்தகைய உணர்ச்சி எழுந்திருக்கும்? நீர் அரசன்முன் சென்றபோது உமது கணவனுக்கு அவன் கொலைத்தண்டனை விதித்திருந்தமைக்குத் தகுதியான பதில் தண்டனை அவனுக்குக் கிடைக்கவேண்டும் என்றே எண்ணியிருந்திருப்பீர். மரணத்தி னும் பார்க்கப் பெரிய தண்டனை யொன்றுண்டா? அதுவும் சாதாரண ரகத்திலான மரணமன்று, தான் இழைத்த தவற்றுக்காக வருந்தி மூர்ச்சித்து அவன் தானாக உயிர்விட்ட உயர்ரக மரணம் அது. இவ்வளவிலுங் காட்சி முடிந்திலது. தன் கணவனாகிய அரசன் உயிர் துறப்பதை அவனது பட்டத்து ராணி காண்கிறாள். அக்காட்சிப் பரிதாபம் அவள் உயிரையும் உண்டு ஏப்பமிட்டு விடுகிறது. மனைவியொருத்தி தன் கணவனுக்குப் பத்தி விசுவாசமாக இருக்கும் பண்பு இதற்கு மேலாக வேறெங்குங் காண இருக்குமா? இங்கே இப்போ இரு பிணங்கள்; இரண்டும் உயர்ரகமான பெருந்தன்மைகிலக்கணமாகக் கடவுள் படைத்த இருவரின் பிணங்கள். எனது வாசகரே! நீர் கண்ணகியின் நிலையில் இருந்திருந்தால் என்ன உணர்ந்திருப்பீர்? எதுவாவது நீர் உணர்ந்திருக்கலாம். இங்கோவெனில் கண்ணகியின் பழிவாங் குந் தாகம் இன்னுமே தணியாமல் நிலைத்திருக்கிறதே.[X] இருந் தும் இச்செந்து நம்மவரிற் பெருந்தொகையினரால் வழிபடப் பெறுகின்றது. அதற்குப் பூசை செய்யப் பூசாரிகளும் ஆயத்தரா யிருக்கிறார்கள். இப்பூசாரிகள் அசைவரின் மேலாந்தரம்.

X. பிசாசுகள் கூட ஒரு பிணத்தோடு திருப்தி யுற்றுவிடுவதாகச் சொல்லப்படுகிறது. இதற்கும் மேலாக, அவள் மதுரைநகர் முழுவதையுங் எரியூட்டி விட்டதகவும் புனையப்பட்டி ருக்கிறது கதை. அப்படிப்பட்ட ஒரு செந்து இத்தகைய ஒரு அமாநுஷ்ய ஆற்றலை எங்ஙனம் பெற்றிருக்கக் கூடும்?

சைவர்களில் அதிகமானோர் விபூதி அணிகின்றனர். அவருள் நகரவாசிகளாய சிலர் அதில் ஆவல் கொள்வதில்லை. அவர்களிற் சிலர் அதைத் தயாரிப்பதிலும் பெற்றுப் பேணுதலிலும் ஆம் கஷ்டத்தை ஏற்கத் தயாரில்லை. ஒரு சிலர் சைவரல்லாத தம் மேலதிகாரிகள் முன் செல்லும்போது வெறும் நெற்றியுடன் போதலையே விரும்பு மளவுக்கு அதை மதிப்பற்ற பொருளாக் குகின்றனர். சைவச் சிறுவர் சிறுமியர்கள் தீட்சை பெறுதல் கட்டாயம் என்றுணரப்பட்ட காலம் ஒன்றிருந்தது. இப்பொழுது இவ்விதி புறநடை விதியாய் விட்டது. தீட்சை பெறும் ஒரு சிலரும் பஞ்சாட்சரத்தை உணர்வின்றியே செபிப்போராக அல்லது அதைச் செபியாமலே விட்டு விடுபவராக இருக்கிறார்கள். விபூதி அணிதல் பஞ்சாட்சர செபம் பண்ணல் எனுமிவற்றில் நிலவும் வேண்டாவெறுப்பு நிலை இவற்றின் மேலான மகிமை பற்றிய மக்களின் அறியாமையின் விளைவாகும்.

இனி, இச்சாமானிய சைவரின் வழிபாட்டு முறைபற்றிக் கவனிப்போம். விகிதாசாரப்படி அதிகமானோர் கடவுளை நினைக்கின்றார்கள். மிகச் சிலர் தினசரி ஆலயஞ் சென்று வருகின்றனர். குறிப்பிடத் தகும் ஒரு தொகையினர் வாரம் ஒரு தடவை திங்கள் அல்லது வெள்ளிக்கிழமை என்ற நியதிப்படி கோயிலுக்குப் போகிறார்கள். சூழ்நிலை நிர்ப்பந்தத்தாற் கோயிலுக்குப் போவோரே அநேகர். குழந்தை ஒன்று நோய்வாய் பட்டால் அதன் தந்தையோ தாயோ கோயிலுக்குப் போய் அதன் மீட்சிக்காகச் சுவாமியை வேண்டுவர். இவ்வேண்டுதல் மூவிதங்களில் ஒன்றாயமையும். (1) இது ஒரு சாமானிய வேண்டுதலா யிருத்தல். (2) ஒரு விசேட பூசை அல்லது அர்ச்சனை சகிதமான வேண்டுதலா யிருத்தல். (3) வேண்டுதல் நிறைவேறும் பட்சத்தில் சுவாமிக்கு ஒரு நன்கொடை வழங்கும் வாக்குறுதியோடு கூடியதாயிருத்தல்.



வேண்டப்படுபவை கொடுக்கப்பட்டாகும் என்ற நம்பிக்கை காரணமாகவே இவ் வேண்டுதல்கள் செய்யப்படு கின்றன. ஆனால், சில வேளைகளில் தாம் வேண்டுவன கிடைக்கும் மற்றும் வேளைகளில் அவை கிடைக்காமற் போம் என்பது சுய அநுபவத்தின் மூலம் ஒவ்வொருவரும் அறியத்தக் கதாம். தம் வேண்டுதல் கை கூடப்பெறாத பட்சத்தில், நல்லறிவு விளக்க முள்ளோர், தமது கர்மநிலை தம் பேற்றுக்கு அநுகூலமா யில்லை; விதியை எதனாலும் மாற்றிவிட முடியாது என்றெண் ணித் திருப்தியுறுவர். ஏனையர் கடவுளிற் குற்றஞ் சுமத்தி அதனில் வெறுப்படைவர். கல்விமான்களிற் சிலர் கூட உலகியல் நலன்க ளுக்காகக் கடவுளை வேண்டும் பழக்கத்தை யதார்த்தப் படுத்து தற்காக அப்பர் சுவாமிகளின், 'வேண்டுவார் வேண்டு வதே[a] ஈவான் கண்டாய்' என்ற அருள் வாக்கை ஆதாரங் காட்டிக் கேட்க வேதனையாயிருக்கின்றது. ஆனால், பெரும்பாலும், வேண்டிக் கொள்ளப்படுவன பெற்றுக்கொள்ளப் படாதிருக்குந் தமது சுய அநுபவத்தின் மூலம் அவர்கள் வேண்டுதல் செய்வதன் பெறுமானத்தைத் தாமாகவே நன்கறிவார்கள். நாஸ்திகர் உட்பட உலக மக்கள் யாபேரும் தாம் தாம் விரும்பும் அநேகாநேகம் விஷயங்களைக் கடவுளிடம் வேண்டுதல் செய்யாமலே பெற்றுக் கொண்டிருக்கு மாற்றையும் அவர்கள் அறிவார்கள். அன்றியும், அப்பர் அருள்வாக்கு, அவர்கள் அதற்குக் கொடுக்கும் பொருளை உண்மையிற் கொண்டுள்ளதாகவில்லை. அதன் யதார்த்தமான விளக்கம் யாதெனில், வழிபடுவோரது உள்ளார்ந்த தேவையைப்[n] பொறுத்து அவருக்கு அந்நேரம் வேண்டியதாயும் அவர் ஆத்ம ஈடேற்ற நலனுக்கு ஒருதலையாக உதவக்கூடிய தாயும் உள்ளதெதுவோ அதையே கடவுள் கொடுக்கிறார் என்பதாம்.

---

a. வேண்டுவதே :- (அந்நேரம் அவருக்கு உண்மையில் எது வேண்டியிருக்கிறதோ அதையே)

n. அவர் தாமும் அறியா வகையிலிக்குந் தேவை.

வைத்தியனொருவன் தன் கவனிப்பிலிருக்கும் நோயாளிக்கு அவ்வப்போதைய அவனது நோய் நிலைக்குப் பொருந்தும் உணவையே தெரிவிப்பானன்றி அவன் கேட்கக் கூடும் எல்லாவற்றையும் அநுமதிப்பானல்லன். சிவனாகிய வைத்தியநாதனும் ஆன்மா ஒன்று தன் ஆணவ நோயிலிருந்து விடுபடுவதற்கு எந்த எந்தப் பழவினை அநுபவம் அவ்வப் போது உயர்ந்த பலனளிக்குமோ அவ்வநுபவத்தையே அவ்வப்போது இனங்கண்டு கொடுத்தல் மூலம் கர்மவிதியை அமுல் செய்பவனாவான்.

ஒருவர் தமது வேண்டுதலை நிறைவேற்றுதற்குக் கைம்மாறாக ஏதேனுமோர் பொருளை அர்ப்பணமாக அல்லது நன்கொடையாக வழங்குவதென்பதும் கடவுள் இலக்கணத்தை நேரெதிராகத் திரித்துக் காணும் விளக்கப் பிழையாம். முதலாவதாக, கடவுள் பரிபூரணர். அவர்க்குத் தேவை என ஒன்றில்லை. ஆகையால், வேண்டுதல் பண்ணுவோரிடமிருந்து அவருக்கு நன்கொடை வேண்டியதில்லை. இரண்டாவதாக, அவர் விருப்பு வெறுப்பற்றவர். ஆதலால் நன்கொடை அவரைப் பிரீதிபடுத்துமாறில்லை. விசேட பூசைகளாற் கடவுள் புளுகம் ஊட்டப்படுகிறாரென்றும் அவருக்குரியது கொடுக்கப்படாத பட்சத்தில் அவர் வெறுப்புற்றுத் தீங்கிழைத்து விடுவாரென்றும் அவர்கள் நினைத்தலுங் கூடும். இம்மனிதர் கடவுள் தம்மிலிருந்து மிக இழிந்த மட்டகமான நிலையில் வைக்கிறார்கள்.

இனி, கோயில்கள் சிலவற்றில் நடத்தப்படும் வருடாந்தர மகோற்சவங்களைப் பற்றிக் கவனிக்கலாம். ஆலயங்கள் பலவற்றில் இது சரியான உணர்வுடன் சரியான முறையில் நடத்தப்படுகிறது. ஆலயம் அமைந்திருக்கும் பகுதிகளுக்குப் புனித மகிழ்வூட்டுஞ் சம்பவமாக இவ்விழாக்கள் அமையும். ஆண், பெண் இரு திறத்தாரும் மகோற்சவ தினங்களைப் புனித தினங்களாகக் கொள்கின்றார்கள். மற்றும் நாட்களிற் கோயிலுக் குப்போகாதோரும் திருவிழா நாட்களிற் கோயில் கும்பிடுதலைக் குறியாகக் கொண்டுள்ளனர். ஆனால், மகோற்சவ நடவடிக்கை



களைச் சரியாக நிதானித்து நடத்தமாட்டாக் கோயில்களுமுள. இக்கோயில்களிற் சில திருவிழாக்களின் போது புனிதப் பாங்கான ஆலயச் சூழல் நாளிலும் பார்க்கக் கேவலமாக்கப்படுகிறது. அப்படிப்பட்ட மகோற்சவங்கள் நம் சமயத்துக்கு அபகீர்த்தி விளைப்பவை. அவை ஆலயச் சூழலை அசிங்கப்படுத்தித் தெய்வ சாந்நித்தியம் நிகழவொட்டாது செய்து விடுகின்றன. சமயப் பண்பாடற்ற இவ்விழாக்களை நடத்துவோர் தம் சமயம் பற்றிய குறைந்தபட்ச அறிவுதானும் இல்லாதவர்கள். தெய்வ மூர்த்தத்துக்கும் சாமானிய பொம்மைக்குமிடையிற் பேதங்காண மாட்டா அளவுக்குத் திணிந்து போயுள்ளது அவர்கள் அறிவீனம்.

தெய்வ மூர்த்தங்களுக்குப் பொய்க் கைகால் வைத்துக் கட்டுவது அவர்கள் பண்ணுஞ் சரியீனங்களில் மிக மோசமான தாகும். இவ்விஷயத்தில், மனிதனொருவன் தன்னுடம்பில் நிகழவிட அநுமதிக்கமுடியாத அளவுக்கு வலுவானவை யும்அழுந்தியிறுக்கப்படவனவுமான கயிற்றுக் கட்டுகள் தெய்வ மூர்த்தத்தில் நிகழ வேண்டியாகிறது. அப்படியாக, இவை தெய்வ மூர்த்தத்துக் கிசைவானவை என எங்ஙனம் நிதானிக்கப்படக் கூடும்? சுவாமி மூர்த்தம் தன்னிலும் பார்க்க மிக இழிந்தது, அது ஒரு பொம்மை மாத்திரம் எனக் கருதுபவன் மட்டுமே அது செய்தல் கூடும். சுவாமியை ஒரு பொம்மையாகக் கையாளுவதை விட மூர்க்கத் தனமானது வேறெதும் இருப்பதாகக் கருதவும் முடியாதே. இருந்தும், கோயிற் குருக்கள், முகாமையாளர், விழா உபயகாரன் என்போர் இதிற் பெருமிதங் கொள்வோ ராயிருக் கின்றனர். பாவம்!

இத்தகையோர் புரியும் இரண்டாவது சரியீனம் ஆலய விழாக்களில் நடனமாதரை ஈடுபடுத்துவதாம். அறிவு விவேகமுள்ளோர் கோயிலுக்குப் போவது தமது இருதய சுத்தியின் பொருட்டாம். நடனமாதர் அதற்கெதிர் இருதயத்தில் இச்சை அழுக்கேற்றி மலினப்படுத்தி விடுவர். ஆயிரக்கணக் கானோர் நடனமாதர் தரிசனத்துக்காகத் திரளுகிறார்கள்.

நடனமாதர் இல்லாத திருவிழா நாட்களில் சுமார் ஒரு டசின் பேர்மட்டுஞ் செல்கிறார்கள். அவர்கள் உண்மையான சுவாமி தரிசனம் வேண்டிச் செல்பவர்கள். மறுவளமாக சொல்வதாயின் இத்திருவிழாக்கள் சுவாமிக்குச் செலுத்துங் கௌரவம் போல் நூறு மடங்கு கௌரவம் நடனமாதர்க்குச் செலுத்த வைக்கின்றன. இதை அவதானிக்கும் வெளிநாட்டு யாத்திரிகர், கடவுளுக்கு நாம் வழங்கும் கௌரவம் நடனமாதர்க்கு நாம் வழங்கும் கௌரவத்தைவிட மிகத் தாழ்ந்தது எனக் குற்றஞ் சாட்டுகிறார்கள். இது நமது சமய கௌரவத்தைப் பாதிக்கும் குற்றச் சாட்டாகவே முடிகின்றது. நடன மாதரை அநுமதிப்பதன் மூலம் நமது கோயில்கள் பாபச் செயல்களைத் தூண்டுகின்றன என்ற ஒரே காரணத்துக்காகச் சைவரொருவர் அதிருப்தியுற்று உரோமன் கத்தோலிக்கராக மாறிக் கொண்டதும் உண்டு.

சைவர்களைப் பலிகடாக்களாக்குகின்ற மூட நம்பிக்கைகளுஞ் சிலவுள. அவற்றைப் பற்றிக் கவனிப்போம். பல்லி சொல்லுதல் எனச் சாதாரண நிகழ்ச்சி சைவர் பலர்க்குப் பாரதூரமான ஒரு விஷயம். இது இருவழிகளில் அர்த்தப்படுத்தப் படுகின்றது. பல்லி சொல்லுதல், கையிடப்பட்ட விஷயம் பயனற்றொழிவதைத் தெரிவிக்கும் எச்சரிக்கை மாத்திரம் என்பர் சிலர். மற்றையோர் பல்லி சாஸ்திரம் என்ற ஒரு சாஸ்திர நூலின் உதவியோடு பலன் காண்கின்றனர். இச்சாஸ்திரத்தின்படி பல்லி சொல்லுதல்களிற் சில உபகார பூர்வமானவை. ஏனையன அபகாரபூர்வமானவை. பல்லி சாத்திரங்கள் மூன்றுள்ளன.[1] அவை பெரும்பாலும் தம்முள் இணக்கமற்றவை. அவை தம்முள் ஒத்துப் போகாதிருப்பதிலிருந்து குறைந்தபட்சம் அவற்றில் இரண்டு பொய்ச்சாத்திரங்கள் எனக் கொள்ளவரும். அவை கூறுவனவற்றை நிரூபிக்கையில் எல்லாமே பொய்யாகக் காணப்படுதலும் ஆம். அன்றியும், பல்லி சொல்லுதலுக்கு நம்மோடு சம்பந்தப்

1. இவற்றிலொன்று 8 திசைகளை அங்கீகரிக்கிறது. மற்றது 16 திசைகளை அங்கீகரிக்கிறது. மூன்றாவது கிரக நிலைகளோடு தொடர்பு காட்டுகிறது.



பட்ட விஷயங்களுடன் எவ்வித தொடர்பும் இருத்தற்கிடமில்லை எனப் பொது அறிவே சொல்லும்.

இதற்கடுத்துச் சோதிட சாஸ்திரம் இடம்பெறுகிறது. இதுவும் மூவேறு அடிப்படைகளைக் கொண்டுள்ளது.[2] இங்கும் ஓரடிப்படையில் சொல்லப்படும் முன்மொழிவு (ஜோசியம்) மற்றஅடிப்படைகளில் வேறுபடுதலை இலகுவிற் கண்டு கொள்ளலாம். இவ்வாற்றால், குறைந்த பட்சம் இவற்றில் இரு அடிப்படைகள் பொய் என்றாகும். மூன்றாவதும் பொய்யே என அநுபவங் காட்டும். சோதிட சாஸ்திரத்தில் மிகவும் உண்மையற்ற கோட்பாடு யாதெனில் ஒருவன் பிறக்கும் வேளை அவனுக்குப் பிரதிகூலமாயிருக்குங் கிரகம் பல தசாப்தங்கள் சென்ற பின்னும், தனக்குரிய தெசாபுத்திகளின் போது அவனை வேட்டையாடும் என்பது.

சோதிட சாஸ்திரம் உண்மையாய்த்தான் இருப்பினும் அதை நம்புதலின் நிகர லாபம் துக்கமாம். ஜோசியம் அநுகூலமானதாயிருப்பினுஞ் சரி பிரதிகூலமாயிருப்பினுஞ் சரி அது துக்கமே. "உம் மகன் மூன்றாண்டுகளில் அரசாங்க சேவையில் உயர் பதவி பெறுவான்" என்று சோதிடரொருவர் மற்றொருவருக்குச் சொல்கிறார். கேட்பவர் மகிழ்ச்சியுறுகிறார். ஆனால், அம்மகிழ்ச்சி வரவர மங்குகிறது. உம்மகன் மூன்றுவருடங்களில் இறப்பான் என அச் சோதிடர் சொல்லியிருந்தால் அவருடைய உணர்வு முன்னையதைக் கேட்டபோதிருந்த மகிழ்ச்சிச் செறிவினும் நூறுமடங்கு தாக்கமுள்ள துக்கஞ் செறிவுள்ளதாய் விடுகிறது. அத்துக்கச் செறிவு தன் வலுவில் வரவர அதிகரிப்பதாகவே இருக்கும். அவரும் அவர் மனைவியும் உளரீதி யாகவும் உடல்ரீதியாகவும் பலவீனப் படுத்தப்பட்டொழிவர். அவர்கள் விசனத்தால் மேற்கொள்ளப்பட்டோராவர்; நோய்க்கிரை யாவர்.

2. இவற்றில் இரண்டின் பிரகாரம் உதயராசி தொடக்க நிலையம். மூன்றாவதன்படி மேடமே எப்போதுந் தொடக்க நிலையம். முன்னைய இரண்டில் ஒன்று கிரகங்களின் இடைவெளியை இடமிருந்து வலமாகவும் மற்றையது வலமிருந்து இடமாகவும் பேசுகின்றன.

அநுகூலமான பலனுள்ளதெனும் ஒன்றின் பலனையும் இத்துடன் சேர நோக்குவோமாயின் ஜோஸ்யம் துயரம். சோதிடம் இரத்தம் உறிஞ்சும் பிசாசு என்பதை இலகுவிற் கண்டுகொள்வோம். வானசாஸ்திரத்தின் கான் முளையாகத் தன்னைக் காட்டுதலிற் பெருமை கொள்கிறது சோதிடம். ஆனால், மகிமைக்குரிய அச்சாஸ்திரத்தின் சட்டபூர்வமான கான்முளையாக இதனை நிரூபித்தற்கு ஆதாரம் ஏதுமின்றாம்.

மற்றொரு மூடநம்பிக்கையாயுள்ளது சூனிய நம்பிக்கை. ஒருவனைத் துன்புறுத்தக் கருதி மந்திரவாதி யொருவன் பிசாசொன்றை ஏவி அனுப்புவது இதன் பண்பாகச் சொல்லப் பெறுகின்றது. ஏவப்பட்ட ஆள் மாறி மாறித் தலையாட்டுபவனா யிருப்பான். சில வேளைகளில் அவன் தன்வச மிழத்தலு முண்டு. உண்மையில், இவைகள் ஒருசில நோய்களின் குறிக்குணங்கள். ஆனால், அந்த ஆளின் உறவினரோ, நாட்டு வைத்தியரோ அது பற்றி அறியாதவராயிருப்பர். அந்த ஆள் தகுதியான மருத்துவ சிகிச்சைக் குட்படுத்தப்பட்டால் அதிலிருந்து மீள்வான்.[1]

இவ்விதமான பொது மக்கள் சைவம் போயொழிய வேண்டும். சமயக் கல்விப் பரம்பல் வந்தாக வேண்டும். இளைஞர், முதியோர் என்ற இருதிறத்தார்க்கும் அது எட்ட வேண்டும். சைவ பாடசாலைகளிற் கற்கும் அதிர்ஷ்டமுள்ள இளைஞர்க்கும் அரசாங்க பாடசாலை இளைஞர்க்கும் இது இலகுவிற் கிடைக்க முடியும். மறு சமயத்தாரின் பாடசாலைகளிற் கற்கும் சைவ மாணவர்க்குச் சைவ அறிவு வாய்க்கச் செய்யும் உபாயங்களைச் சைவ ஸ்தாபனங்கள் மேற்கொள்ள வேண்டும்.

1. நமது பழைய மாணவனொருவன் இப்படியான ஒரு நோயுள்ளவனாயிருந்தான். அவனுக்கு ஏற்ற வைத்திய அணுகுமுறை ஒன்றை அறிவித்து அவனை அதன்வழி நிற்கச் செய்து நாம் பலன் கண்டுள்ளோம். நோய் தீர்ந்து அவன் அரசாங்க நில அளவையாளர் உத்தியோகம் பெற்றுப் பெருந்தொகைப் பணமுந் திரட்டி வாழ்கின்றான். பணத்தைக் கொண்டு செய்வதென்னெனத் தெரியாத நிலையிலிருப்பதாக ஒருநாள் அவன் என்னிடஞ் சொல்லிக் கவலைப்பட்டதுமுண்டு.



சைவ ஞான விளக்கம் முதியோராயிருக்குஞ் சைவர்க்கும் ஏற்பட வைத்தற்காம் வழிவகைகளையும் அவ்விஸ்தாபனங்கள் கண்டமைக்க வேண்டும். இவை கடைப்பிடிக்கப்படும் பட்சத்தில் மாத்திரம் சைவம் சுயமகிமையோடு பிரகாசிப்பதாகும்.

முற்றும்

## சைவத் திருவாளர் சு. சிவபாதசுந்தரம், பி.ஏ.,
எழுதிய நூல்கள்

* * *

1. சைவபோதம் 1 & 2
2. திருவருட்பயன் - உரை
3. சைவசமய சாரம்
4. சுப்பிரமணியப் பெருமான் கொண்ட திருப்பெரு வடிவம்
5. சைவக்கிரியை விளக்கம்
6. அகநூல்
7. The Essentials of Logic ( Tamil & English )
8. Saiva School of Hinduism
9. Sivagnanabotham with a rejoinder to a Christian Critic
10. கல்வி விதிகளும் முறைகளும்
11. Glories of Shaivaism
12. சைவ மகத்துவம் (மேற்படி ஆங்கில நூலின் தமிழ் மொழியாக்கம். தமிழில் மொழியாக்கம் செய்தவர் யாழ்ப்பாணம், ஏழாலை பண்டிதர் மு. கந்தையா.)